# திருக்குறள்

## தெளிவுரை



மூதறிஞர்

வ. சுப. மாணிக்கம்

# திருக்குறள் தெளிவுரை

மூதறிஞர்
வ. சுப. மாணிக்கனார்

மணிவாசகர் பதிப்பகம்
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதல் பதிப்பு : சனவரி, 2000
நான்காம் பதிப்பு : ஏப்ரல், 2006
திருவள்ளுவர் ஆண்டு : 2037

**விலை : ரூ. 18.00**

கிடைக்குமிடம் :

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, **சிதம்பரம்** - 608 001.
31, சிங்கர் தெரு, பாரிமுனை, **சென்னை** - 600 108.
6, சிவஞானம் தெரு, **தி. நகர், சென்னை** - 600 017.
110, வடக்கு ஆவணி மூல வீதி, **மதுரை** - 625 001.
15, ராஜ வீதி, **கோயமுத்தூர்** - 641 001.
28, நந்தி கோயில் தெரு, **திருச்சி** - 620 002.

---

தொலைபேசி :

| | | | |
|---|---|---|---|
| **சிதம்பரம்** | **: 230069** | **சென்னை** | **:25361039** |
| **தி. நகர்** | **: 24357832** | **மதுரை** | **: 2622853** |
| **கோயமுத்தூர்** | **: 2397155** | **திருச்சி** | **: 2706450** |

---

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
சென்னை – 600 021, தொலைபேசி : **25954528**

# திருக்குறள்

(தெளிவுரை)

மூதறிஞர்

வ.சுப. மாணிக்கனார்

# அதிகாரவகராதி

## திருவள்ளுவரின் வேறு பெயர்கள்

நாயனார்
தேவர்
முதற்பாவலர்
தெய்வப் புலவர்
நான்முகனார்
மாதானுபங்கி
செந்நாப் போதார்
பெருநாவலர்

## திருக்குறளின் வேறு பெயர்கள்

முப்பானூல்
உத்தரவேதம்
தெய்வநூல்
திருவள்ளுவம்
பொய்யாமொழி
வாயுறை வாழ்த்து
தமிழ் மறை
பொதுமறை

## கடவுள் வாழ்த்து

அகரஒலி எல்லா எழுத்துக்கும் முதலாகும்;
ஆதிபகவன் உலகுக்கெல்லாம் முதலாவான். 1

கற்றதன் பயனென்ன? தூய அறிஞனது
நல்லதிருவடியை வணங்கா விட்டால். 2

நெஞ்சமலரில் இருப்பவன் அடியை நினைப்பவர்
இவ்வுலகில் நெடுங்காலம் வாழ்வர். 3

விருப்பு வெறுப்பு இல்லாதவனை நினைத்தவர்க்கு
என்றும் துன்பங்கள் இல்லை. 4

இறைவனது உண்மைப் புகழை விரும்புவாரை
அறிவில்லாத வினைகள் நெருங்கா. 5

ஐம்புலனையும் அழித்தவனது மெய்ந் நெறியைக்
கடைப் பிடித்தவர் நெடுங்காலம் வாழ்வர். 6

உவமை கடந்தவன் அடியை நினைந்தாலன்றி
மனக் கவலையை மாற்ற முடியாது. 7

அறக்கடலாம் அருளாளன் அடியை நினைந்
தாலன்றிப் பாவக் கடலைக் கடக்க முடியாது. 8

எண்குணம் உடையவன் அடியை வணங்காத்தலை
பாராதகண் கேளாதசெவி போலப் பயனற்றது. 9

இறைவன் அடியை நினைந்தவர் பிறவிக்கடலைக்
கடப்பர்; நினையாதவர் கடவார். 10





## கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. 1

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். 2

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். 3

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. 4

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 5

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். 6

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. 7

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. 8

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 9

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். 10

## வான் சிறப்பு

மழையால் உலகம் நிலைபெற்று வருவதால்
மழையே அமிழ்தம் என்று உணரவேண்டும். 11

உண்பவர்க்கு நல்ல உணவுகளை உண்டாக்கித்
தானும் குடிநீராய்ப் பயன்படுவது மழை. 12

மழையில்லாது போகின் கடல்சூழ் உலகத்தில்
பசி உயிர்களை வாட்டும். 13

மழைவருத்துக் குறையின் உழவர்கள் உழுவதற்கு
ஏர் பிடிக்க மாட்டார்கள். 14

உழவர்களைக் கெடுக்கவும் துணைநின்று ஆக்கவும்
வல்ல பேராற்றல் உடையது மழை. 15

மேலிருந்து துளிமழை விழாவிட்டால் நிலத்தில்
பசும்புல்லின் நுனியையேனும் காண முடியுமா? 16

மேகம் நீரைத்தாங்கத் திரும்பப் பொழியாவிடின்
நெடுங்கடலும் தன்வளம் குறைந்து விடும். 17

வானம் வறண்டால் திருவிழாவும் வழிபாடும்
உலகில் வானவர்க்கும் நிகழ மாட்டா. 18

மேலுலகம் நீரை வழங்கா விட்டால்
தானமும் தவமும் மறைந்து விடும். 19

உலக நடப்புக்கு ஒழுக்கம் வேண்டும்; அவ்வொழுக்கம்
மழையில்லா விட்டால் யாரிடமும் இருக்குமா? 20





## *வான் சிறப்பு*

வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று. 11

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை. 12

விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி. 13

ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். 14

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 15

விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது. 16

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின். 17

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. 18

தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின். 19

நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு. 20

## நீத்தார் பெருமை

ஒழுக்கம் விடாத துறவிகளின் பெருமையே
நூல்கள் ஒருமுகமாகப் பாராட்டும் பெருமை. 21

துறவிகளின் பெருமையை அளக்க முடியாது.
உலகில் இறந்தவர்களை எண்ண முடியுமா? 22

வாழ்வின் இருவேறு நிலைகளை ஆராய்ந்து
துறந்தவர் பெருமையே உலகில் விளங்கும். 23

அறிவுக்கோலால் ஐம்பொறிகளை அடக்கியவன்
மேலான நிலத்துக்கு ஒரு வித்தாவான். 24

ஐந்தும் அடக்கியவன் ஆற்றலுக்கு வானவர்
தலைவனாம் இந்திரனே தக்க சான்று. 25

அரிய செயல்களைச் செய்பவர் பெரியவர்;
அவற்றைச் செய்ய முயலாதவர் சிறியவர். 26

சுவை ஒளி ஊறு ஓசை மணம் என்ற
ஐவகைகளை அறிந்தவன் வசம் உலகம். 27

நிறைமொழி மாந்தரின் பெருமையை உலகுக்கு
அவர்கூறிய உண்மைகளால் அறியலாம். 28

குணக்குன்று போலும் சான்றோரின் சினத்தைச்
சிறுபொழுதும் யாரும் தாங்க முடியாது. 29

அந்தணர் என்பவர் துறவிகளே. ஏன்?
அவர் எவ்வுயிர்க்கும் அருள் செய்பவர். 30





## நீத்தார் பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவல் துணிவு. 21

துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று. 22

இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு. 23

உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. 24

ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. 25

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 26

சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு. 27

நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். 28

குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது. 29

அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான். 30

## அறன் வலியுறுத்தல்

அறம் மதிப்பும் செல்வமும் தரும்; ஆதலின்
அறத்தினும் வாழ்வுக்கு நல்லது வேறில்லை. 31

அறத்தைப்போல நன்மை வேறில்லை; அதனை
மறத்தலைப் போலக் கேடு வேறில்லை. 32

இயன்ற அளவு இடைவிடாது அறத்தை
ஏற்கும் இடமெல்லாம் செய்க. 33

மனப்பிழை யின்றிநட; அதுவே அறம்;
மற்றவை யெல்லாம் வெளிப்பகட்டு. 34

பொறாமை ஆசை சினம் கடுஞ்சொல்
வாராமல் ஒழுகுவதே அறம். 35

சாகும்போது பார்த்துக்கொள்வோம் என்னாது
நாளும் அறஞ்செய்க; அதுவே உயிர்த்துணை. 36

பல்லக்கில் இருப்பவனையும் சுமப்பவனையும்
பார்த்து அறத்தின் பயனை மதிப்பிடாதே. 37

நாள் தவறாமல் அறம்செய்க; அது ஒருவன்
பிறப்பு வழியை அடைக்கும் கல்லாகும். 38

அறநெறியால் வருவதே இன்பம்;
பிறவழியால் வருவன துன்பம், பழி. 39

யாரும் செய்ய வேண்டுவது அறமே;
யாரும் விடவேண்டியது பழியே. 40





## *அறன் வலியுறுத்தல்*

சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு. 31

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. 32

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 33

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற. 34

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். 35

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 36

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. 37

வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். 38

அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல. 39

செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி. 40

## இல்வாழ்க்கை

இல்லறத்தான் மரபான மூவேந்தர்க்கும்
நல்லாட்சிக்கு உற்ற துணையாவான். 41

துறவிக்கும் வறியவர்க்கும் நிலைதிரிந்தவர்க்கும்
இல்லறத்தானே துணைவன். 42

தென்புலத்தார் நிலத்தெய்வம் விருந்து சுற்றம்
தன்குடும்பம் என்ற ஐவகையையும் காக்க. 43

பழியஞ்சிப் பகுத்துண்ணும் இல்லறத்தானுக்கு
வாழ்வு குறையாது; வழியும் நில்லாது. 44

அன்பும் அறனும் உடைய குடும்பம்
நாகரிகமும் நலமும் பெற்று விளங்கும். 45

அறத்தின்படி குடும்பம் நடத்தினால் அதனைத்
துறந்துபோய்ப் பெறுவது என்ன? 46

இயல்பாகக் குடும்ப வாழ்வு வாழ்பவன்
முன்னேற முயல்வார் எல்லாரினும் சிறந்தவன். 47

பிறரை நெறிப்படுத்தித் தானும் நெறிநிற்கும்
இல்வாழ்வே தவத்தினும் ஆற்றல் உடையது. 48

அறமென்று உறுதிப்பட்டது குடும்ப வாழ்வே;
துறவும் பழியில்லா விட்டால் அறமாகும். 49

உலகத்தில் மணந்து முறையாக வாழ்பவன்
மேலுலகத் தேவராக மதிக்கப்படுவான். 50





## இல்வாழ்க்கை

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. 41

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. 42

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. 43

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல். 44

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன். 46

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. 47

ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. 48

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 49

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். 50

## வாழ்க்கைத் துணைநலம்

வாழ்க்கைத்துணை யார்? குடும்பப் பண்பினள்;
கணவன் வருவாய்க்கேற்ப வாழ்பவள். 51

வீட்டுப்பண்பு மனைவியிடத்து இல்லையானால்
வாழ்வில் பிறநலம் இருந்தும் பயனில்லை. 52

மனைவிக்குப் பண்பிருப்பின் எது இல்லை?
மனைவிக்குப் பண்பில்லை எனின் எது உண்டு? 53

கற்புத்திண்மை செறிவாக இருப்பின் ஆணுக்கு
மனைவியினும் நற்பேறு உண்டா? 54

தெய்வத்தை வணங்காது கணவனை வணங்குபவள்
பெய்யென்றால் மழையும் பெய்யுமே. 55

தன்னையும் கணவனையும் புகழையும் போற்றிச்
சுறுசுறுப்பாக இருப்பவளே மனைவி. 56

மனைவியர்க்குக் கற்புக் காவலே காவல்;
வீட்டுச் சிறை என்ன பயன் செய்யும்? 57

கணவனது அன்பைப் பெறும் மனைவியர்
மேலுலகிலும் பெருஞ்சிறப்புப் பெறுவர். 58

மனைவி புகழ் காவாவிடின் பகைவர் முன்
காளைபோன்ற நடை கணவனுக்கு இராது. 59

மனைவியின் பண்பே குடும்பத்துக்கு மங்கலம்;
குழந்தைப் பேறே குடும்பத்தின் நல்லணி. 60





## வாழ்க்கைத் துணைநலம்

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 51

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். 52

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. 53

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். 54

தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. 55

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 56

சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 57

பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. 58

புகழ்புரிந்த இல்லிலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 59

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. 60

## மக்கட்பேறு

அறிவுடைய குழந்தைச் செல்வத்தைத் தவிரப் பிறசெல்வங்களை யாம் மதிப்பதில்லை. 61

பழியில்லாப் பண்புக் குழந்தைகளைப் பெற்றால் பெற்றோரை எப்பிறவியும் தீயவை நெருங்கா. 62

தம் நல்வினையால் குழந்தைகள் பிறத்தலின் குழந்தைகளே பெற்றோரின் பொருளாவார். 63

அமிழ்தினும் மிக இனிக்குமே தம் குழந்தைகள் இளங்கையால் கிண்டிய உணவு. 64

குழந்தை மேனிபடுவது உடலுக்கு இன்பம்; மழலைச் சொல் கேட்பது காதுக்கு இன்பம். 65

தம் குழந்தைகளின் மழலைச்சொல் கேளாதவரே குழலிசை யாழிசை இனியது என்பர். 66

அவையில் முந்தியிருக்கும்படி அறிவளிப்பதே தந்தை மகனுக்குச் செய்யும் கடமை. 67

தம் குழந்தைகளைப் பேரறிவுடையவர் ஆக்குவது பெற்றோர்க்கும் எல்லோர்க்கும் இனியது. 68

தன்மகன் வீரன் என்று புகழக்கேட்ட தாய் பெற்றகாலத்திலும் பெருமகிழ்ச்சி அடைவாள். 69

எத்தவஞ் செய்து பெற்றான் இவன்தந்தை என்று பலர் சொல்லும்படி நடப்பதே மகன் கடமை. 70





## *மக்கட்பேறு*

பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற. 61

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 62

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும். 63

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 64

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. 65

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல். 67

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. 68

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். 69

மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல். 70

## அன்புடைமை

அன்புக்கும் அடைப்பு உண்டோ? அன்புடையவர்
கண்ணீரே உள்ளத்தைக் காட்டிவிடும். 71

அன்பிலார் எல்லாம் தமக்கே கொள்வார்;
அன்பினர் உடம்பையும் பிறர்க்கு வழங்குவர். 72

உயிர் உடம்பினைப் பெற்ற தொடர்பு
இருவர் அன்புத்தொடர்பால் வந்தது என்பர். 73

அன்பு பழகும் விருப்பத்தைத் தரும்;
அவ்விருப்பம் புதிய நட்புச் சிறப்பைத் தரும். 74

உலகத்தில் காதலர்கள் அடையும் சிறப்பு
அன்போடு வாழ்ந்ததால் வந்தது என்பர். 75

அறத்திற்கு மட்டும் அன்பு துணையில்லை;
வீரத்திற்கும் அதுவே துணை. 76

எலும்பில்லாப் புழுவை வெயில் வருத்தும்;
அன்பில்லா உயிரை அறம் வருத்தும். 77

நெஞ்சத்தில் அன்பின்றி வாழ முடியுமா?
பாலை நிலத்தில் பட்டமரம் தளிர்க்குமா? 78

அன்பாம் உறுப்பு அகத்தில் இல்லையெனின்
புறத்து உறுப்பெல்லாம் இருந்தும் என்ன? 79

உயிருடைய உடம்பாவது அன்புடைய வாழ்வு;
அன்பிலார் உடம்புகள் எலும்புத் தோல்கள். 80





## *அன்புடைமை*

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். 71

அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 72

அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு. 73

அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. 74

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு. 75

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 76

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். 77

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 78

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு. 79

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. 80

## விருந்தோம்பல்

குடும்பமாக இருந்து சிறந்து வாழ்வதெல்லாம்
விருந்துபேணி உதவி செய்தற்கே. 81

வந்தவிருந்து வெளிப்புறம் இருக்க, தனக்குச்
சாவாமருந்து கிடைப்பினும் உண்ணல் ஆகாது. 82

நாளும் வருகின்ற விருந்தைப் போற்றுக;
வாழ்வு துன்பப்பட்டு அழியாது. 83

முகம் மலர்ந்து விருந்து செய்பவன் வீட்டில்
அகம் மலர்ந்து திருமகள் தங்கிவிடுவாள். 84

விருந்து செய்தபின் மிச்சத்தை உண்பவனது
நிலத்துக்கு விதைகூட இடவேண்டுமா? 85

வந்தாரைப் போற்றி வருவாரை ஏற்பவன்
தேவர்க்கு நல்விருந்து ஆவான். 86

விருந்தின்பயன் இதுவென்று அளக்க முடியாது;
விருந்தினர் பெருமையே விருந்தின் பெருமை. 87

விருந்து என்னும் வேள்வியில் ஈடுபடாதவர்
காத்த பொருளையும் இழந்து பின் வருந்துவர். 88

செல்வத்தில் வறுமை விருந்திடா மடமையாம்;
இக்குணம் முழுதும் அறிவிலியிடமே இருக்கும். 89

அனிச்சப்பூ மோந்தால் வாடும்; விருந்தோ
முகமாறிப் பார்த்தாலே வாடிப் போம். 90





## *விருந்தோம்பல்*

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 81

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 82

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று. 83

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல். 84

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 86

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். 87

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். 88

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு. 89

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 90

## இனியவை கூறல்

அன்பும் தூய்மையும் அறமும் உடைய
உண்மையாளர் சொல்லே இன்சொல்லாம். 91

முகமலர்ந்து என்றும் இன்சொற் கூறின்
அகமலர்ந்து கொடுப்பதினும் சிறந்தது. 92

முகம் மலர்ந்து இனிமையாகப் பார்த்து
உள்ளத்தோடு சொல்லுக; அதுவே அறம். 93

யார்க்கும் இன்பச் சொல்லைச் சொல்லுக;
துன்பந்தரும் வறுமை வாராது. 94

பணிவும் இன்சொல்லுமே உயிரணிகள்;
பிறவெல்லாம் உடலணிகள். 95

நல்லவற்றைக் கண்டு இனிமையாகக் கூறின்
தீமை தேயும்; அறம் வளரும். 96

பிறர்க்கு நற்பயன் தரும் உயர் பண்புச்சொல்
தனக்கும் நயமும் நலமும் தரும். 97

சிறுதன்மை இல்லாத இன்சொல்
எப்பிறப்பிலும் இன்பம் தரும். 98

இன்சொல் தனக்கு நலந்தருவதைக் கண்டவன்
ஏன் பிறரிடம் கடுஞ்சொற் கூறுகிறான்? 99

இன்சொல் இருக்கவும் கடுஞ்சொல் கூறாதே;
கனியை விடுத்துக் காயைக் கவரலாமா? 100





## இனியவை கூறல்

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 91

அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொல னாகப் பெறின். 92

முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம். 93

துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. 94

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 95

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 96

நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல். 97

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பந் தரும். 98

இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. 99

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

## செய்ந்நன்றி அறிதல்

கேளாமலே முன்வந்து செய்த உதவிக்கு
உலகமும் வானமும் கொடுத்தாலும் ஈடாகா. 101

நற்சமயத்துச் செய்த உதவி சிறிதாயினும்
உலகத்தைவிட மிகச் சிறந்தது. 102

பயன் கருதாது செய்த உதவியின் நன்மை
எண்ணிப் பார்ப்பின், கடலினும் பெரியது. 103

சிறிதளவு நன்மை செய்தாலும் பயனறிந்தோர்
பெரிய நன்மையாகக் கருதுவர். 104

உதவி உதவிய பொருளைப் பொறுத்ததன்று;
உதவி பெற்றவரின் பண்பினைப் பொறுத்தது. 105

தூயவர் நட்பை மறவாதே; துன்பத்தில்
துணைசெய்தார் நட்பைத் துறவாதே. 106

துன்பக் கண்ணீரைத் துடைத்தவர் நட்பினை
எடுக்கின்ற பிறப்பெல்லாம் எண்ணுவர். 107

உதவியை மறப்பது என்றும் நல்லதில்லை;
உதவாமையை உடனே மறப்பது நல்லது. 108

ஒருநன்மை செய்தவர் பெருந்தீமை செய்தாலும்
அந்நன்மையை நினைக்கவே தீமை மறையும். 109

எந்த நலத்தை அழித்தாலும் பிழைக்கலாம்;
நன்றி கெட்டால் பிழைப்பில்லை. 110





## *செய்ந்நன்றி அறிதல்*

செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது. 101

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 102

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது. 103

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். 104

உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 105

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு. 106

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. 107

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. 108

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும். 109

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 110

## நடுவு நிலைமை

இடந்தோறும் முறையோடு ஒழுக முடியின்
நடுவு நிலைமை மிகச்சிறந்த அறமாம். 111

நேர்மை உடையவனது செல்வம் குறையாமல்
வழி வழி மக்கட்குத் துணையாகும். 112

நலமே தரினும் நேர்மையில்லா ஆக்கத்தை
அப்போதே விட்டு விடுக. 113

இவர் நேர்மையர் நேர்மையற்றவர் என்பது
அவரவர் வழியினரால் காணமுடியும். 114

அழிதலும் ஆதலும் உலகியற்கை; ஆதலின்
மனம் சாயாமையே சான்றோர்க்கு அழகு. 115

நின் நெஞ்சம் நேர்மை தவறிச் செல்லின்
கேடு காலம் என்று தெரிந்து கொள்க. 116

நேர்மையாக நின்றமையால் தாழ்வு வரின்
அதனைக் கேடாக உலகம் கருதாது. 117

சமமாக நின்று பின் நிறுக்கும் தராசுபோல
மனஞ்சாயா நேர்மையே நடுவர்க்கு அழகு. 118

உள்ளம் சிறிதும் சாயாமல் இருந்தாலன்றோ
சொல்லுகின்ற சொல் நேர்மைச் சொல்லாகும். 119

விலைப்பொருளையும் கொள்பொருளாக மதித்தால்
வணிகர்க்கு நல்ல வணிகம் ஏற்படும். 120





## நடுவு நிலைமை

தகுதி எனவொன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின். 111

செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப்பு உடைத்து. 112

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 113

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும். 114

கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. 115

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுஒரீஇ அல்ல செயின். 116

கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. 117

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி. 118

சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின். 119

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின். 120

## அடக்கமுடைமை

அடக்கம் வீரருள் ஒருவனாக்கும்; அடங்காமை
பேதைக் கூட்டத்தில் சேர்க்கும். 121

அடக்கத்தை ஒரு குறிக்கோளாகப் போற்றுக;
உயிர்க்கு அதனினும் முன்னேற்றம் இல்லை. 122

அறிவன அறிந்து முறையோடு அடங்கின்
அதனை உலகம் தெரிந்து சிறப்பிக்கும். 123

தரத்திலே குறையாது அடங்கியவன் தோற்றம்
மலையினும் பார்வைக்குச் சிறந்தது. 124

எல்லார்க்கும் பணிவுடைமை வேண்டும்; அது
செல்வர்க்கு இருப்பது இன்னும் செல்வமாம். 125

ஒருபிறப்பில் ஆமைபோல் ஐம்பொறியும் அடக்கின்
எழு பிறப்பிலும் சேமம் உண்டு. 126

எவற்றை அடக்காவிடினும் நாவை அடக்குக;
அடக்காவிடின் சொற்குற்றப்பட்டு வருந்துவாய். 127

ஒரு சொல்லிலேனும் தீமை நேருமாயின்
எல்லா நன்மையும் கெடுதலாகி விடும். 128

தீச்சுட்ட புண்ணோ உள்ளே ஆறிப்போம்;
சுடுசொல்லோ வடுவாகி என்றும் ஆறாது. 129

உள்ளக் கொதிப்பை அடக்கிய வல்லவனைக்
காண்பதற்கு அறம் காத்துக் கிடக்கும். 130





## *அடக்கமுடைமை*

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். 121

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை உயிர்க்கு. 122

செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின். 123

நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது. 124

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 125

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. 126

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 127

ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும். 128

தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினாற் சுட்ட வடு. 129

கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து. 130

## ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் பெருஞ்சிறப்புத் தரும் ஆதலின்
உயிர் கொடுத்தும் காக்க வேண்டும். 131

எவ்வளவு வருந்தினாலும் ஒழுக்கமாக இரு;
எவ்வளவு ஆராய்ந்தாலும் அதுவே துணை. 132

விடா ஒழுக்கமே உயர்ந்த குடிப்பிறப்பு;
ஒழுக்கத்தை விடுவது விலங்குப் பிறப்பு. 133

கற்பவன் மறந்தாலும் படித்துக் கொள்ளலாம்;
மானிட ஒழுக்கம் குறைந்தாலோ கெடுவான். 134

பொறாமைப் பட்டவனுக்கு வளர்ச்சி உண்டோ?
ஒழுக்கம் கெட்டவனுக்கு உயர்வு உண்டோ? 135

உரமுடையவர் ஒழுக்கம் சிறிதும் தளரார்;
தளரின் துன்பம் பல வருமென்று அறிவார். 136

விடா ஒழுக்கத்தால் முன்னேற்றம் வரும்;
விடுவதால் பொருந்தாப் பழி வரும். 137

நல்லொழுக்கம் நன்மைக்கெல்லாம் வித்து;
தீயொழுக்கத்தால் எந்நாளும் துன்பமே. 138

என்றும் ஒழுக்கம் உடையார் வாயிலிருந்து
தவறியும் தீய சொற்கள் தோன்றா. 139

உலகத்தோடு ஒட்டி ஒழுகத் தெரியாதவர்
பல கற்றிருந்தும் அறிவு இல்லாதவரே. 140





## *ஒழுக்கமுடைமை*

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். 131

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. 132

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 133

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். 134

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. 135

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. 136

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. 137

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 138

ஒழுக்க முடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். 139

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 140

## பிறனில் விழையாமை

பிறன் மனைவியை விரும்பும் மடமை உலகில்
அறம்பொருள் அறிந்தவரிடம் இருப்பதில்லை. 141

பிறனது வாயிலில் நிற்பவனைப் போலப்
பெரும்பாவியும் பெரும்பேதையும் இல்லை. 142

நம்பினவர் வீட்டில் தீமை செய்பவர்
செத்தவரல்லது வாழ்பவர் அல்லர். 143

அறிவின்றி அயலான் மனைவியை விரும்புபவன்
எவ்வளவு பெரியவனாயினும் என்ன? 144

எளிதென்று கருதிப் பிறன்மனை நுழைபவன்
என்றும் தீராத பழியை எய்துவான். 145

பகை பாவம் அச்சம் பழி என்ற நான்கும்
பிறன் வீட்டில் நுழைவானை விடமாட்டா. 146

நெறியோடு வாழும் குடும்பத்தான் யார்?
இன்னொரு குடும்பத்தாளை விரும்பாதவனே. 147

பிறன்மனையை விரும்பி நினையாத பேராற்றல்
சான்றோர்க்கு அறமும் ஒழுக்கமும் ஆம். 148

உலகில் எந்நன்மைக்கும் உரியவர் யார்?
பிறனுக்கு உரியவளை அணையாதவரே. 149

அறங்கடந்து தீமைபல செய்யினும் செய்க;
பிறன்மனை விருப்பத்தை அறவே ஒழிக. 150





## *பிறனில் விழையாமை*

பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல். 141

அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரின் பேதையார் இல். 142

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்துஒழுகு வார். 143

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். 144

எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. 145

பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண். 146

அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். 147

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ ஆன்ற ஒழுக்கு. 148

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார். 149

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

## பொறையுடைமை

குழிபறிப்பாரையும் நிலம் சுமப்பது போல
நம்மை இகழ்வாரையும் பொறுப்பதே சிறப்பு. 151

பிறரது பெருங்குற்றத்தை என்றும் பொறுக்க;
முடியுமாயின் மறக்க; அது மிக நல்லது. 152

பெரியவறுமை வந்த விருந்தை நீக்குவது;
பெரியவலிமை பேதையைப் பொறுப்பது. 153

பெருந்தன்மை நீங்காதிருக்க வேண்டின்
பொறுக்குந் தன்மையைப் போற்றிக் கொள்க. 154

தண்டித்தவரை யார் மதிப்பர்? பொறுத்தவரையே
பொன்போல் போற்றி மதிப்பர். 155

தண்டித்தவர்க்கு அப்போதைய மகிழ்ச்சியே;
பொறுத்தவர்க்கோ உலகம் உள்ளளவும் புகழ். 156

பிறர் முறையல்லவற்றைச் செய்தாலும் வருந்தி
நீ அறமல்லவற்றைச் செய்யாதே. 157

தன் இறுமாப்பால் தீமை செய்தவரை நீ
உன் பொறுமைச் சிறப்பால் வென்று விடுக. 158

தரங்கெட்டவரின் வசவைப் பொறுப்பவர்
துறந்தவரினும் தூயவர். 159

பட்டினி கிடந்து நோன்பிருப்பவர் பெரியவர்;
அவரினும் பெரியவர் வசவைப் பொறுப்பவர். 160





## *பொறையுடைமை*

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. 152

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 153

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும். 154

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 155

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். 156

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. 157

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். 158

துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். 159

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின். 160

## அழுக்காறாமை

மனத்தில் பொறாமை இல்லாத நிலையே
ஒழுக்க நெறியாம் என்று கொள்க. 161

யார்மேலும் பொறாமை இல்லை எனின்
சிறந்த மேன்மை வேறில்லை. 162

தனக்கு நல்வளர்ச்சி வேண்டாம் என்பவனே
மற்றவன் வளர்ச்சிக்குப் பொறாமைப்படுவான். 163

பொறாமையால் தமக்குத் தீதுவரும் ஆதலின்
பொறாமையால் பிறர்க்குத் தீது செய்யார். 164

பொறாமையாளரைக் கெடுக்க அதுவே போதும்;
பகைவர் கெடுக்கத் தவறினும் அது தவறாது. 165

கொடுப்பதைக் கண்டு பொறாமைப்படுபவனது
சுற்றத்தாரும் உணவுஉடை இன்றி அழிவர். 166

மனம் சுருங்கிப் பொறாமைப்படுபவனைச்
சீதேவி மூதேவியிடம் ஒப்படைப்பாள். 167

பொறாமையாகிய பாவம் செல்வம் கெடுத்துத்
தீய வழியிலும் கொண்டுபோய் விடும். 168

பொறாமைப்படுபவன் உண்மையில் வளர்கிறானா?
நல்லவன் கெடுகிறானா? எண்ணிப்பார். 169

பொறாமையால் வாழ்வு விரிந்தவரும் இல்லை;
பொறுப்பதால் வளர்ச்சி குறைந்தவரும் இல்லை. 170





## அழுக்காறாமை

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு. 161

விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 162

அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான். 163

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 164

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது. 165

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். 166

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 167

அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 168

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 169

அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதுஇல்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல். 170

## வெஃகாமை

நேர்மை யின்றிப் பிறர்பொருளைக் கவர்ந்தால்
உடனே குடியழிந்து குற்றங்கள் பெருகும். 171

கொள்ளை விரும்பிக் கூடாதன செய்யார்
நேர்மைக்கு அஞ்சும் பெரியவர். 172

சிறுநலத்தை விரும்பிக் கொடியவை செய்யார்
பெருநலத்தை நாடுபவர். 173

ஆசைகளை அடக்கிய உயர்ந்த அறிஞர்
இல்லை என்பதற்காகப் பிறர்பொருளை நாடார். 174

எவர்பொருளையும் நச்சிக் கொடுமை செய்தால்
நுணுகிப் பரந்த அறிவால் பயன் என்ன? 175

அருளை நாடி உரியவழியில் நிற்பவன்
பிறர் பொருளைக் கவர நினைப்பின் கெடுவான். 176

பிறர்பொருளால் வரும்விளைவு மிகப் பொல்லாது;
ஆதலின் தீய முன்னேற்றத்தை வேண்டாதே. 177

தன் செல்வம் குறையாமைக்கு வழி யாது?
பிறன் செல்வத்தைப் பறிக்க விரும்பாமை. 178

முறையறிந்து பிறர் பொருளை விரும்பாத
அறிஞரைத் தெரிந்து திருமகள் அடைவாள். 179

பின்வருவது பாராமல் விரும்புவது அழிவு;
வேண்டாம் என்னும் பெருமிதம் வெற்றி. 180





## வெஃகாமை

நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். 171

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 172

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 173

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 174

அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 175

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். 176

வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். 177

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 178

அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந் தாங்கே திரு. 179

இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னுஞ் செருக்கு. 180

## புறங்கூறாமை

ஒருவன் அறத்தைப் பழித்துத் தீமை செய்யினும்
கோள் சொல்லான் என்பது காதுக்கு இனியது. 181

அறம் அழித்துச் செய்யும் தீமையினும் தீது
புறத்தே இகழ்ந்து முன்னே புகழ்வது. 182

கோள்சொல்லி நடித்து உயிர் வாழ்தலினும்
சாவது நல்லது; அறத்தின்பயன் கிடைக்கும். 183

எதிரே கடுமையாகச் சொல்லினும் சொல்லலாம்;
ஆளில்லாத போது கோள் சொல்லற்க. 184

இவன் நெஞ்சத்தில் நேர்மை இல்லை என்பது
கோள் சொல்வதிலிருந்துகண்டு கொள்ளலாமே? 185

பிறரது குறையை நீதேடிக் கூறின்
உன் பெரிய குறையை மற்றவர் விடுவாரோ? 186

மகிழ்ந்து பேசி நட்புச் செய்யத் தெரியாதவர்
கோள்சொல்லி நண்பரையும் பிரித்து விடுவர். 187

பழகியவர் குற்றத்தையே தூற்றித் திரிபவர்
பழகாதவரிடம் எப்படி எப்படியோ? 188

போனது பார்த்துப் புறங்கூறுபவனை
உலகம் சுமக்கிறது; அதுவும் ஓர் அறமோ? 189

பிறர்குறை காண்பதுபோல் தங்குறை காணின்
வாழும் உயிர்க்குத் தீது உண்டோ? 190





## *புறங்கூறாமை*

அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. 181

அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 182

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும். 183

கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல். 184

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும். 185

பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும். 186

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். 187

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு. 188

அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை. 189

ஏதிலார் குற்றம்போல் தன்குற்றங் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. 190

## பயனில சொல்லாமை

கேட்டார் வெறுக்க வீணாகப் பேசுபவனை
எல்லாரும் இகழ்வர். 191

பலர்முன் வீண்பேச்சுப் பேசுவது நண்பர்க்கு
வேண்டாதன செய்தலினும் தீது. 192

பயனில்லாதவற்றை விரித்து உரைத்தால்
விளங்காதவன் என்று பேராகும். 193

பயனில்லாத சிறுசொல்லைப் பலர்முன் கூறுவது
அறிவும் இல்லை; நன்மையும் இல்லை. 194

பண்புடையவர்கள் பயனில சொன்னால்
தரமும் சிறப்பும் போய் விடும். 195

பயனில சொல்வானைப் புகழ்கின்றவனை
மனிதன் என்னாதே; மனிதப்பதர் என்று சொல். 196

சான்றோர் முறையல சொல்லினும் சொல்லலாம்;
பயனற்றவை சொல்லல் ஆகாது. 197

அரிய பயனை அடைய முயலும் அறிஞர்
பெரியப்பயன் இல்லாதவற்றைச் சொல்லார். 198

மயக்கம் இல்லாத நல்லறிஞர் மறந்தும்
பொருளற்ற சொற்களைச் சொல்லார். 199

பயனுள்ள நல்ல சொற்களையே சொல்லுக;
பயனில்லா வீண் சொற்களைச் சொல்லாதே. 200





## *பயனில சொல்லாமை*

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும். 191

பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது. 192

நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை. 193

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லா ரகத்து. 194

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். 195

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி யெனல். 196

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 197

அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். 198

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர். 199

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 200

## தீவினையச்சம்

கொடியவர் தீவினைகளை அஞ்சாது செய்வர்;
நல்லவர் செய்ய அஞ்சுவர். 201

யார்க்கும் கொடுமைகள் கொடுமை தரும்;
தீயைக்காட்டிலும் அவற்றை நெருங்காதே. 202

கொடுமைகளைப் பகைவர்க்கும் செய்யாது ஒழிக;
அதுவே அறிவிற் சிறந்த அறிவாகும். 203

மறந்தும் பிறனுக்குக் கேடு எண்ணாதே;
எண்ணின், அறம் உன்னை வாழவிடுமா? 204

இல்லை என்பதற்காகத் தீமைகள் செய்யாதே;
செய்யின் திரும்பவும் பெரிய ஏழையாவாய். 205

துன்பங்கள் தன்னைத் தொடவிரும்பாதவன்
பிறர்க்குத் தீமைகள் செய்யாது இருப்பானாக. 206

எனைப் பெரிய பகையிலிருந்தும் தப்பிக்கலாம்;
கொடுமைப் பகையோ விடாது கொல்லும். 207

கொடுமை செய்தார் கெடுவது உறுதி;
நிழல் ஒருவன் அடியைவிட்டு நீங்குமா? 208

தான்வாழ ஆசை இருக்குமானால்
சிறிதும் தீவினைப் பக்கம் செல்லாதே. 209

நெறிவிலகிக் கொடுமை இழையாதவன்
என்றும் கேடில்லாதவன் எனத் தெளிக. 210





## *தீவினையச்சம்*

தீவினையார் அஞ்சார் விழுமியர் அஞ்சுவர்
தீவினை என்னுஞ் செருக்கு. 201

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். 202

அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல். 203

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. 204

இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து. 205

தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான். 206

எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும். 207

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று. 208

தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். 209

அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின். 210

## ஒப்புரவறிதல் (பொதுக்கொடை)

கடமை கைம்மாறு எதிர்பார்ப்பதில்லை;
உலகம் மழைக்கு என்ன செய்ய முடியும்? 211

மிக முயன்று சேர்த்த பொருளெல்லாம்
உதவிபெறத் தக்கவர்க்கு உதவிசெய்தற்கே. 212

தேவர் உலகத்திலும் நம் உலகத்திலும்
பொது நன்மையினும் சிறந்த செயல் இல்லை. 213

ஒத்த பொதுநலத்தை அறிந்தவனே வாழ்பவன்;
அறியாதவன் செத்தவரைச் சேர்ந்தவன். 214

உலக நலம் விரும்பும் பேரறிஞனது செல்வம்
ஊருணியில் நிறைந்த நீர் போலாகும். 215

உலக அன்பு உடையவனிடம் செல்வம் இருப்பது
பழமரம் ஊர்நடுவே பழுத்தது போன்றது. 216

பேரருளாளன் இடத்துச் செல்வம் இருப்பது
யார்க்கும் கிடைக்கும் மருந்துமரம்போலும். 217

ஊர்க்கடமையை அறிந்த அறிவுடையவர்
வறுமைக்காலத்தும் பொதுநலம் குறையார். 218

செய்யவேண்டியன செய்ய இயலாமையே
நல்ல அன்பனுக்கு வறுமையாகும். 219

பொது நன்மையினால் கேடு வருமென்றால்
அக்கேடு விலைபோகும் மதிப்புடையது. 220





## ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ உலகு. 211

தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 212

புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற. 213

ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 215

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். 216

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். 217

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர். 218

நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு. 219

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து. 220

## ஈகை (தனியுதவி)

ஈகை என்பது ஏழைகளுக்குக் கொடுப்பதே;
பிறர்க்குச் செய்வது எதிர்பார்த்துக் கொடுப்பது. 221

வீட்டுநெறி என்றாலும் வாங்குவது தீது;
வீடில்லை என்றாலும் கொடுப்பது நல்லது. 222

இல்லை என்ற துயரை எடுத்துரைக்கும் முன்பே
கொடுக்குங்குணம் குடிப்பிறந்தவனிடம் உண்டு. 223

கேட்பவரின் முகமலர்ச்சியைக் காணும் வரை
கேட்கவிடுதல் இனியது ஆகாது. 224

பசி பொறுப்பது பேராற்றல்; அதனினும்
பேராற்றல் பிறர் பசியை ஆற்றுவது. 225

ஏழைகளின் பெரும் பசியைத் தீர்ப்பாயாக;
அதுதான் செல்வனுக்குச் சேமிப்பிடம். 226

பகுத்துக் கொடுத்து உணவருந்தியவனைத்
தீய பசிநோய் என்றும் தீண்டாது. 227

பொருளைத்தேடி இழக்கும் கொடியவர்கள்
கொடுத்து மகிழும் இன்பத்தை அறியாரோ? 228

நிறைந்த உணவைத் தனித்து உண்பது
இரப்பதினும் பார்வைக்கு அருவருப்பானது. 229

ஓர் ஏழைக்கு உதவ முடியாத போது
விரும்பாச் சாவும் விரும்பத் தகும். 230





## ஈகை

வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 221

நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. 222

இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள. 223

இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு. 224

ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 225

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 226

பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது. 227

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 228

இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல். 229

சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. 230

## புகழ்

வறியார்க்கு ஈக; புகழோடு வாழ்க;
அதுவே உயிர்க்குச் சிறந்த ஊதியம். 231

உலகில் பாராட்டுவார் பாராட்டுவன எல்லாம்
வறியவர்க்கு ஈந்த வள்ளல்களின் புகழ்களே. 232

நிலையாத உலகத்து உயர்ந்த புகழ் தவிர
எதுவும் அழியாது நிலைப்பதில்லை. 233

உலகில் நெடும்புகழ் ஈட்டிய மக்களையே
வானுலகம் போற்றும்; தேவரைப் போற்றாது. 234

புகழின் பொருட்டு அழிதலும் சாதலும்
அறிவுடையவர்க்கே இயலும். 235

அவைக்கண் புகழ் நோக்கொடு தோன்றுக;
அந்நோக்கம் இலாதார் தோன்றாமை நல்லது. 236

புகழில்லார் தம்மேல் வருத்தப்படாது தம்மை
இகழ்வார்மேல் வருத்தப்படுவது ஏன்? 237

பின்நிலைக்கும் புகழை ஒருவன் பெறாவிடின்
அவன்பிறப்பு உலகிற்கே ஒரு பழி. 238

புகழில்லா உடம்பைச் சுமப்பின்
நல்ல நிலங்கூட வளங் குறையும். 239

வசையின்றி வாழ்பவரே வாழ்பவர்;
இசையின்றி இருப்பவரே இறந்தவர். 240





## *புகழ்*

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. 231

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ். 232

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல். 233

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. 234

நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது. 235

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. 236

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன். 237

வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின். 238

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். 239

வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 240

## அருளுடைமை

அருளே செல்வத்துள் சிறந்த செல்வம்;
பொருளோ கயவரிடத்தும் உண்டு. 241

நல்லவழியை ஆராய்ந்து அருள் செய்க;
எவ்வகையால் பார்த்தாலும் அருளே துணை. 242

அறியாமையும் துன்பமும் உடைய உலகத்தை
அருள்நெஞ்சம் கொண்டவர் அடைய மாட்டார். 243

எல்லா உயிர்களையும் பேணும் அருளாளனுக்குத்
தன்னுயிர் பற்றிய கவலை வினை இல்லை. 244

அருளாளர்க்குத் துன்பம் என்பது இல்லை;
காற்றுடன் வளமுடைய இவ்வுலகமே சான்று. 245

அருள் இல்லாமல் கொடுமைகள் செய்பவர்
பொருளிழந்து வாழ்வும் வழுவினார் ஆவர். 246

பொருளில்லார்க்கு இவ்வுலக வாழ்வு இல்லை;
அருளில்லார்க்கு அவ்வுலக வாழ்வு இல்லை. 247

பொருளில்லார் ஒருநாள் செல்வத்தால் செழிப்பர்;
அருளில்லார் தொலைந்தவரே; திரும்ப மீளார். 248

அருளிலான் அறஞ்செய்தான் என்பது பேதை
இறைவனைக் கண்டான் என்பது போலாம். 249

உன்னினும் எளியவனை நீ வருத்தும்போது
உன்னினும் வலியவன்முன் உன்னை நினை. 250





## *அருளுடைமை*

அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள. 241

நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றான்
தேரினும் அஃதே துணை. 242

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 243

மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை. 244

அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி. 245

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார். 246

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. 247

பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது. 248

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம். 249

வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 250

## புலால் மறுத்தல்

தன்தசை பெருக்கப் பிறதசை தின்பவனுக்கு
எங்ஙனம் அருள் பிறக்கும்? 251

போற்றாதார்க்குப் பொருள்வரவு இல்லை
புலால் தின்பவர்க்கு அருள் வரவு இல்லை. 252

இறைச்சி சுவைத்தவனுக்கு அருள் தோன்றாது;
ஆயுதம் தாங்கியவனுக்கு இரக்கம் இருக்குமா? 253

கொல்லாமையே அருள்; கொல்லுதலே பாவம்;
புலால் உண்ணுதலே சிறுமை. 254

புலால் உண்ணாமையால் நீண்ட ஆயுள் உண்டு;
புலால் உண்டவனை நரகமும் உண்ணாது. 255

உலகத்தார் தின்னுதற்குப் புலால் வாங்காவிடின்
விற்பதற்கென்று விற்பார் யாரும் இரார். 256

ஒருடம்பின்புண்என்று அருவருப்புத் தோன்றின்
புலாலை யாரும் உண்ண விரும்பார். 257

உயிரை நீக்கிக் கொண்டுவந்த இறைச்சியைக்
குற்றத்தை நீக்கிய அறிஞர் உண்ணார். 258

ஆகுதி பெய்து ஆயிரவேள்வி செய்தலினும்
ஒருயிரைக் கொன்று தின்னாமை மேல். 259

கொல்லாதவனையும் புலால் உண்ணாதவனையும்
கைகூப்பி எல்லா உயிர்களும் வணங்கும். 260





## புலால் மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். 251

பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு. 252

படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம். 253

அருளல்லது யாதெனின் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல். 254

உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு. 255

தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். 256

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின். 257

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன். 258

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. 259

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும். 260

## தவம்

தவத்தின் வடிவு தன்துன்பத்தைப் பொறுத்தல்;
எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யாமை. 261

தவக்கோலமும் தவமுடையவர்க்கே சிறப்பு;
அதனைத் தவமிலாதார் கொள்வது பழிப்பு. 262

இல்லறத்தார் ஏன் தவஞ்செய்ய மறந்தனர்?
துறவிக்கு உதவ வேண்டும் என்பதற்காகவா? 263

பகைவரை அழிக்கலாம், நண்பரை ஆக்கலாம்;
இந்த ஆற்றல் நினைப்பின் தவத்தால் வரும். 264

வேண்டுவன வேண்டியபடி பெறலாம்; ஆதலின்
உரிய தவத்தை உடனே முயலுக. 265

தவஞ்செய்பவரே தங்காரியம் செய்பவர்;
பிறர் ஆசையால் வீண்காரியம் செய்பவர். 266

காய்ச்சக் காய்ச்சப் பொன் ஒளிமிகும்; துறவிக்குத்
துன்பம் தாக்கத் தாக்க மெய்யறிவு மிகும். 267

தன்னுயிர் தன்முனைப்பு இல்லாதவனை
உலகத்து உயிரெல்லாம் வணங்கும். 268

தவத்தின் ஆற்றல் கைகூடியவர்கட்கு
யமனைத் தாண்டுதலும் இயலும். 269

உலகில் வறியவர் பலர். ஏன்?
முயலாதார் பலர்; முயல்வார் சிலர். 270





## தவம்

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. 261

தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது. 262

துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம். 263

ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும். 264

வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும். 265

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு. 266

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. 267

தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாம் தொழும். 268

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. 269

இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். 270

## கூடாவொழுக்கம்

வஞ்சகனது மறைந்த நடத்தையைக் கண்டு
ஐம்பூதங்களும் உடம்பினுள்ளே சிரிக்கும். 271

தன்மனம் குற்றமென அறிந்தும் செய்தால்
பெரிய தவக்கோலத்தால் என்ன பயன். 272

அடக்கமிலான் கொண்ட கொடிய வேடம்
பசு புலித்தோலிட்டுப் பயிர்மேய்வது போலாம். 273

வேடத்தில் மறைந்து வேண்டாதன செய்தல்
புதரில் மறைந்து பறவை பிடிப்பது போலாம். 274

ஆசையில்லை எனச்சொல்வாரது பொய்நடத்தை
சீசீ என்று இகழும் துன்பத்தைத் தரும். 275

மனத்தால் துறவாது துறந்தவர் போல
ஏய்ப்பவரே எல்லாரினும் கொடியவர். 276

குண்டுமணி போலப் புறத்தே காவியும்
அகத்தே கருமையும் உடையார் உண்டு. 277

மனத்தில் அழுக்கிருக்கவும் நீரெல்லாம் ஆடி
ஏய்த்து நடப்பவரே உலகில் ஏராளம். 278

பார்வைக்கு அம்புநேர்; யாழ்வளைவு; ஆயினும்
செயலைக் கண்டு உண்மை அறிக. 279

உலகம் தூற்றும் கெட்ட நடத்தையை விடின்
தலை மழித்தலும் சடை நீட்டலும் வேண்டாம். 280





## கூடா ஒழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். 271

வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின். 272

வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று. 273

தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று. 274

பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று
ஏதம் பலவுந் தரும். 275

நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல். 276

புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து. 277

மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். 278

கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன
வினைபடு பாலால் கொளல். 279

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின். 280

## கள்ளாமை

வசைவேண்டாம் என்பவன் மிகச் சிறிதும்
கள்ளமின்றித் தன் நெஞ்சைக் காக்க. 281

பிறன் பொருளை மனத்தால் நினைப்பதும் தீது;
ஆதலின் திருடிப் பறிக்க எண்ணாதே. 282

களவினால் வந்த செல்வம் மிகவும்
பெருகுவது போலத் தோன்றிக் கெடும். 283

களவிலே மிகுந்த ஆசை இருப்பது
கடைசியில் நீங்காத துன்பம் தரும். 284

பிறர் ஏமாந்த நிலையைப் பார்த்திருப்பவனிடம்
அருளும் அன்பும் இரா. 285

களவிலே மிக்க சுவை கண்டவர்கள்
அளவிலே நின்று வாழ்க்கை நடத்தார். 286

நெறிபட வாழும் உறுதியுடையவர் இடத்துத்
திருடும் பெரும்பேதைமை இராது. 287

நெறியாளர் நெஞ்சு அறத்துக்கு இருப்பிடம்;
திருடர்கள் நெஞ்சு மறைவுக்கு இருப்பிடம். 288

களவுதவிர வேறொன்றும் அறியாதவர்கள்
தீமைகள் செய்து விரைவில் அழிவர். 289

திருடுபவருக்கு விரைவில் உயிர் போகும்;
திருடாதவர்க்கு வானுலகமும் போகாது. 290





## கள்ளாமை

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. 281

உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல். 282

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். 283

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும். 284

அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். 285

அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர். 286

களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல். 287

அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு. 288

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 289

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. 290

## வாய்மை

வாய்மை என்று போற்றப்படும் பண்பு எது?
சிறிதும் தீமை இல்லாத சொற்களைக் கூறுவது. 291

பொய்யினால் பிறர்க்குத் தூயநன்மை வரின்
அப்பொய்யையும் மெய்யாகக் கொள்ளலாம். 292

உன்நெஞ்சறியப் பொய் கூறாதே; கூறின்
உன் நெஞ்சம் உன்னைச் சுடாதா? 293

மனமறியப் பொய் சொல்லாதவன் உலகத்தார்
மனத்தில் எல்லாம் இருப்பான். 294

தவமும் தானமும் செய்வதினும் மேலானது
உள்ளத்தோடு உண்மை சொல்வது. 295

பொய்சொல்லாமை பெரும் புகழாம்;
பொய் சொல்லத் தெரியாமை பேரறமாம். 296

உண்மையை உண்மையாகவே கடைப்பிடித்தால்
பிறஅறங்கள் செய்யவும் வேண்டுமோ? 297

புறத்தூய்மை நீரால் உண்டாகும்; மனத்தூய்மை
பொய் சொல்லாமையால் விளங்கும். 298

எல்லா ஒளியும் ஒளியல்ல; சான்றோர்க்கு
உண்மை ஒளியே ஒளி. 299

யாம் உண்மையாகக் கண்ட உண்மைகளுள்
வாய்மையினும் நல்லறம் வேறில்லை. 300





## *வாய்மை*

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். 291

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். 292

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 293

உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன். 294

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. 295

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும். 296

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 297

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும். 298

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 299

யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற. 300

## வெகுளாமை

பலிக்குமிடத்துச் சினவாதவனே காப்பவன்;
பலியா இடத்து எப்படி நடந்தால் என்ன? 301

பலிக்காத இடத்துக் கோபிப்பது தீது;
பலிக்கும் இடத்தும் அதுபோல் தீயது இல்லை. 302

யார்மேலும் சினத்தை மறந்து விடுக;
மறவாவிடின் தீமைகள் பிறந்துவிடும். 303

முகமலர்ச்சியையும் அகமலர்ச்சியையும்
கொல்லும் சினத்தினும் பிறபகை உண்டோ? 304

நீ வாழவேண்டின் சினத்தை ஒழிக்க;
ஒழிக்காவிடின் சினம் உன்னை ஒழிக்கும். 305

சினத்தீ சினங்கொண்டானையும் கொல்லும்;
இனமாகிய துணையையும் எரிக்கும். 306

சினத்தைப் போற்றிக்கொண்டவன் கெடுவான்;
தரையைக் குத்தியவனுக்குக் கைவலியாதா? 307

பூங்கொத்தை நெருப்பில் இட்டாற்போலக்
கொடுமைகள் செய்யினும் கோபம் கூடாது. 308

மனத்தாலும் வெகுளியை மறந்துவிடின்
நினைத்த எல்லாம் உடனே கிடைக்கும். 309

சினத்தில் மிக்கவர் செத்தவர்க்கு ஒப்பாவர்;
சினத்தை விட்டவர் துறவியர்க்கு ஒப்பாவர். 310





## வெகுளாமை

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என். 301

செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற. 302

மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும். 303

நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற. 304

தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம். 305

சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்
ஏமப் புணையைச் சுடும். 306

சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 307

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. 308

உள்ளிய வெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின். 309

இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. 310

## இன்னா செய்யாமை

சிறப்புச் செல்வம் கிடைப்பினும் பிறர்க்குத்
துன்பம் செய்யாமையே தூயவர் கொள்கை. 311

கருவம் கொண்டு துன்புறுத்தினும் திரும்பத்
துன்பம் செய்யாமையே தூயவர் நோக்கம். 312

வலிய வந்து பகைத்தவர்க்குங்கூடத்
துன்பம் செய்யின் துயரம் நீங்காது. 313

கொடுமை செய்தாரைத் தண்டிப்பது எப்படி?
அவர் வெட்கப்படும்படி நன்மை செய்வது. 314

பிறர் துன்பத்தைத் தன்துன்பம் போலக்
கருதாத இடத்து அறிவினால் என்ன பயன்? 315

தனக்குக் கொடியது எனப் பட்டதைத்
தான் பிறர்க்குச் செய்ய விரும்பலாமா? 316

எவ்வகையாலும் என்றும் எவர்க்கும்
மனமறியக் கொடுமை செய்யாதே. 317

தன்னுயிர்க்குப் பிடிக்காது என்ற தீமையைப்
பிறவுயிர்க்கு ஏன் செய்கின்றான்? 318

காலையில் பிறர்க்குக் கொடுமை செய்யின்
மாலையில் உனக்குக் கொடுமை தானேவரும். 319

கேடுகள் கேடுசெய்தார்க்கே வந்துசேரும்;
துன்பம் வேண்டாதார் துன்பம் செய்யார். 320





## இன்னா செய்யாமை

சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். 311

கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். 312

செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும். 313

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். 314

அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை. 315

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல். 316

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை. 317

தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல். 318

பிறர்க்குஇன்னா முற்பகல் செய்யின் தமக்குஇன்னா
பிற்பகல் தாமே வரும். 319

நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். 320

## கொல்லாமை

எவ்வுயிரையும் கொல்லாமையே அறமாம்;
கொல்லுதல் எல்லாத் தீமையும் தரும். 321

ஆசிரியர்கள் கூறிய அறத்துள் மேலானது
பகுத்துண்டு பல்லுயிரையும் காப்பதுவே. 322

நிகரற்ற அறம் கொல்லாமை; அதற்குத்
துணையாகும் வாய்மையும் நல்ல அறம். 323

நன்னெறி என்பது யாது? ஓருயிரும்
கொலைப் படாதபடி எண்ணும் நெறி. 324

பிறந்த உயிரைக் கொல்ல அஞ்சுபவனே
பிறவிக்கு அஞ்சும் துறவியினும் மேலானவன். 325

கொல்லா அறத்தைக் கொண்டவன் ஆயுளை
உயிருண்ணும் யமன் நெருங்க மாட்டான். 326

இன்னொருவன் உன்னுயிரை எடுக்கும் போதும்
அவனது இன்னுயிரை எடுக்காதே. 327

வீரர்க்குப் போரில் படை விளைவு சிறந்தது;
தனிக்கொலை விளைவு இழிந்தது. 328

எல்லா இழிவுகளையும் ஆராய்ந்த பெரியவர்
கொலைஞனை மிக இழிந்தவனாகக் கருதுவர். 329

நோயுடலும் தீயவாழ்வும் உடையார் யார்?
ஓருயிரை உடம்பிலிருந்து பிரித்தவர். 330





## கொல்லாமை

அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும். 321

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை. 322

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 323

நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி. 324

நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை. 325

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணுங் கூற்று. 326

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை. 327

நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை. 328

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. 329

உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். 330

## நிலையாமை

அறம்

நிலையாத பொருள்களை நிலைக்கும் என்று கருதும் அறிவு மிகவும் கடையானது.

பெருஞ் செல்வம் வந்துபோவது நாடகத்துக்கு மக்கள் வருவது போவது போன்றது. 331

செல்வம் நிலைப்படாதது; அது கிடைத்தால் நிலைத்தவற்றை உடனே செய்து கொள்க. 332

காலம் உயிரறுக்கும் வாள்; நாளன்று; உணர்வார்க்கு உண்மை விளங்கும். 333

நாச்சுருண்டு விக்கல் வருமுன்னே அறத்தைத் தானே முற்பட்டுச் செய்க. 334

நேற்று இருந்தான் இன்று இறந்தான் என்பதே இவ்வுலகத்தின் பேரியல்பு. 335

மறுக்கணம் இருப்பதை அறிய மாட்டாதவர் கட்டுகின்ற கோட்டைகள் எவ்வளவோ கோடி. 336

உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு கூடுவிட்டுப் பறவை ஓடுவது போன்றது. 337

தூங்குவது போன்றது சாவு; தூங்கி விழிப்பது போன்றது பிறப்பு. 338

உடலில் ஒட்டுக் குடியிருக்கும் உயிர்க்கு நிலையான ஒரு வீடு கிடைக்க வில்லையோ? 339

340





## *நிலையாமை*

நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 331

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. 332

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். 333

நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின். 334

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். 335

நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு. 336

ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல. 337

குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. 338

உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 339

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு. 340

## துறவு

எந்தெந்தப் பொருளைத் துறந்தோமோ
அந்தந்தப் பொருளால் துன்பம் இல்லை. 341

பொருள் உள்ளபோதே துறக்க; துறந்தால்
இப்பிறப்பில் வரும் நலன்கள் பல. 342

ஐம்புல உணர்ச்சிகளை அடக்க வேண்டும்;
எல்லாத் தேவையையும் விடுக்க வேண்டும். 343

யாதும் இல்லாமையே தவத்தின் இயல்பு;
ஏதும் இருப்பது ஆசையாகி விடும். 344

பிறப்பற முயல்வார்க்கு உடலும் கூடாதெனின்
பிறதொடர்பு பற்றி என்ன சொல்வது? 345

யான் எனது என்னும் கருவமற்றவன்
தேவர்க்கும் எட்டா உயர்நிலையை அடைவான். 346

பற்றுக்களை விடாது பிடித்துக் கொள்பவரைத்
துன்பங்களும் விடாது பிடித்துக் கொள்ளும். 347

முற்றத் துறந்தவரே வீடடைவார்; அங்ஙனம்
துறவாதவர் பிறப்புவலையில் மயங்கி வீழ்வார். 348

பற்று விட்டபோதுதான் பிறப்பு விடும்;
விடாதபோது இறப்பும் பிறப்பும் வரும். 349

பற்றில்லாத இறைவனைப் பிடித்துக் கொள்க;
அப்பிடிப்பே உலகப்பற்றை விடுதற்கு வழி. 350





## துறவு

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். 341

வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல. 342

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு. 343

இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து. 344

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை. 345

யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். 346

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 347

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 348

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். 349

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 350

## மெய்யுணர்தல்

பொய்ப்பொருள்களை மெய்ப்பொருள் என்று மயங்குவதால் பிறப்புத் தோன்றும். 351

மயக்கம் விட்டுத் தெளிந்த அறிஞர்களுக்குப் பேதைமை இராது; பேரின்பம் உண்டாம். 352

ஐயம் இன்றி உண்மை கண்டவர்களுக்கு வீட்டுலகம் கிட்ட உள்ளது. 353

உண்மை யுணர்ச்சி இல்லாதவர்களுக்கு ஐம்புல அடக்கம் இருந்தும் பயனில்லை. 354

ஒரு பொருள் எத்தன்மையதாக இருப்பினும் அதன் உண்மையைக் காண்பதே அறிவு. 355

இப்பிறப்பில் கற்று உண்மை கண்டவரே திரும்பப் பிறவா வீட்டினை அடைவர். 356

உள்ளம் உண்மையை உணர்ந்துகொண்டால் பின்னும் பிறப்புண்டோ என்று அஞ்சாதே. 357

பிறப்பாகிய பேதைமை நீங்குமாறு சிறப்பாகிய பொருளைக் காண்பதே அறிவு. 358

மெய்ப்பற்றை உணர்ந்து பொய்ப்பற்றை விடின் வருகின்ற நோய்கள் மீறி வாரா. 359

காமம் சினம் அறியாமை மூன்றும் அடியோடு கெடவே நோயும் கெடும். 360





## மெய்யுணர்தல்

பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு. 351

இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 352

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து. 353

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு. 354

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 355

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 356

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 357

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு. 358

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். 359

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். 360

## அவாவறுத்தல்

ஆசைதான் எவ்வுயிர்க்கும் என்றும்
நெடும் பிறவி தரும் வித்து என்பர். 361

ஒன்று விரும்பின் பிறவாமையை விரும்புக;
விரும்பாமையை விரும்பின் அது கைகூடும். 362

ஆசையின்மையே சிறந்த செல்வம்;
அதுபோன்ற செல்வம் எங்கும் இல்லை. 363

மனத்தூய்மை என்பது ஆசையின்மையே;
அத்தன்மை வாய்மையினால் வரும். 364

ஆசைவிட்டவரே பற்று விட்டவர் ஆவார்;
மற்றவர்கள் முடிவாகப் பற்று விட்டதில்லை. 365

ஆசை யாரையும் ஏய்த்து விடும் ஆதலின்
அதற்கு அஞ்சி நடப்பதே அறம். 366

ஆசையை முழுதும் அறுத்து விட்டால்
நல்வினை நாம் விரும்பியபடி வரும். 367

ஆசையில்லார்க்குத் துன்பம் இல்லை;
அது உடையார்க்குத் துன்பம் வளரும். 368

ஆசையாகிய பெருந்துன்பம் அகன்று விட்டால்
இன்பம் வந்துகொண்டே இருக்கும். 369

என்றும் நிரம்பாத ஆசையை நீக்கிவிடின்
நீங்காத இன்பம் உடனே கிடைக்கும். 370





## அவா அறுத்தல்

அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து. 361

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 362

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல். 363

தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். 364

அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர். 365

அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா. 366

அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். 367

அவாஇல்லார்க் கில்லாகுந் துன்பம்அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். 368

இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின். 369

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். 370

## இறைமாட்சி

படைகுடி உணவு அமைச்சு நட்பு அரண்
ஆறும் உடையவன் அரசரிற் சிறந்தவன். 381

அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம்
நான்கும் வேந்தனுக்கு நன்கு வேண்டும். 382

காலந்தாழாமை கல்வி துணிவு மூன்றும்
நிலன் ஆள்பவனுக்கு நீங்காது வேண்டியவை. 383

அறம் வழுவாது தீமைகளை நீக்கி
மறம் வழுவாது மானம் காப்பது அரசு. 384

பொருளை ஆக்கி ஈட்டிக் காத்து வகைசெய்யும்
ஆற்றல் உடையதே அரசு. 385

பார்வைக்கு எளிமை சொல்லுக்கு இனிமை
உடைய மன்னனது நாடு புகழப்படும். 386

இனிது சொல்லி அளிசெய்யும் அரசன்
தன்சொற்படி உலகத்தைக் காண்பான். 387

முறையோடு காக்கும் மன்னன் குடிகட்குக்
காணும் கடவுள் ஆவான். 388

கசப்பான சொல்லையும் கேட்கும் பண்புள்ள
வேந்தனது குடைக்கீழ் உலகம் தங்கும். 389

கொடை அன்பு நேர்மை குடிபோற்றல்
உடையவனே மன்னர்க்கு ஒளியாவான். 390





## இறைமாட்சி

படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு. 381

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க் கியல்பு. 382

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு. 383

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மானம் உடைய தரசு. 384

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. 385

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். 386

இன்சொலால் ஈத்தளிக்க வல்லார்க்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு. 387

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும். 388

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. 389

கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி. 390

## கல்வி

கற்கத்தக்க நூல்களைத் தெளிவாகக் கற்க;
கற்றபின் தக்கபடி வாழ்வில் நிற்க. 391

எண்ணும் எழுத்தும் ஆகிய இரண்டும்
வாழ்வார்க்குக் கண்கள் என்பர். 392

கற்றோர்க்கே கண் உண்டு; கல்லாதவர்க்கோ
முகத்தில் இரண்டு புண் உண்டு. 393

மகிழுமாறு பழகுவர்; நினைக்குமாறு பிரிவர்;
இதுவே புலவரின் பண்பு. 394

செல்வர் முன் வறியர்போல ஏக்கத்தோடு
படித்தவரே மேல்; படியாதவர் கீழ். 395

மணற்கேணி தோண்டத் தோண்ட நீர் ஊறும்;
நூல்கள் கற்கக்கற்க அறிவூறும். 396

எந்நாடும் தன்னாடாம்; எவ்வூரும் தன்னூராம்;
ஏன் ஒருவன் சாகும்வரை படிப்பதில்லை? 397

ஒரு பிறப்பில் படித்த படிப்பு ஒருவர்க்கு
எழுபிறப்பிலும் வந்து உதவும். 398

தன்னின்பம் உலக இன்பம் ஆதலின் கற்றவர்
கல்வியை மேன்மேலும் காதலிப்பர். 399

அழியாத சிறந்த செல்வம் கல்வியே;
பிறபொருள்கள் செல்வம் அல்ல. 400





## கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. 39

எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டு
கண்ணென்ப வாழும் உயிர்க்கு. 39

கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்
புண்ணுடையர் கல்லா தவர். 39

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 39

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்ற
கடையரே கல்லா தவர். 39

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்கு
கற்றனைத் தூறும் அறிவு. 3

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவ
சாந்துணையுங் கல்லாத வாறு. 3

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து. 3

தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 3

கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை. 4

## கல்லாமை

பலநூல் அறிவின்றி அவை யேறுதல்
அரங்கின்றிக் காய் உருட்டுவது போலும். 401

படிப்பு இல்லாதவன் பேச விரும்புதல்
முலையில்லாதவள் இன்பம் விழைவது போலும். 402

கற்றவர்முன் பேசாது அடங்கி இருப்பரேல்
கல்லாதவரும் மிக நல்லவர் ஆவர். 403

கல்லாதவன் உடைய இயற்கையறிவு
கூர்மை யாயினும் அறிஞர் கொள்ளார். 404

கற்றவரோடு கலந்து உரையாடிய அளவில்
கல்லாதவன் மதிப்புக் கரைந்து போகும். 405

உயிரோடு இருக்கிறார் எனலாமே யன்றிக்
கல்லாதவர் களர்நிலம் போன்றவர். 406

நுண்மை மாட்சி கூர்மை பொருந்திய அறிவு
இல்லாதவன் அழகு நிறப்பொம்மை போலும். 407

படித்தவர் எய்திய வறுமையைக் காட்டிலும்
படியாதவர் எய்திய செல்வம் கேடாகும். 408

கல்லாதவர் உயர் குடியிற் பிறந்திருப்பினும்
தாழ்குடியிற் பிறந்த அறிஞர்க்கு ஒவ்வார். 409

விலங்கும் மக்களும் வேற்றுமை எவ்வளவு
அவ்வளவு கற்றாரும் கல்லாரும். 410





## கல்லாமை

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். 401

கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. 402

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். 403

கல்லாதான் ஒட்பம் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார். 404

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 405

உளரென்னும் மாத்திரையர் அல்லார் பயவாக்
களரனையர் கல்லா தவர். 406

நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று. 407

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. 408

மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு. 409

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். 410

## கேள்வி

செல்வத்திற் சிறந்தது கேள்விச் செல்வம்;
அச்செல்வம் எச்செல்வத்திலும் மேலானது. 411

செவிக்கு உணவு கிடைக்காத போது
வயிற்றுக்குக் கொஞ்சம் உணவு அளிக்கலாம். 412

செவியுணவு உண்டவர் அவியுணவு உண்ட
தேவர்க்கு ஒப்பாவர் இவ்வுலகில். 413

கல்லாவிடினும் கற்றார் சொல்லைக் கேட்க;
சோர்வுக் காலத்துத் தாங்கும் துணையாகும். 414

ஒழுக்கம் உடையவர் சொல்லைக் கேட்பது
வாழ்வில் வழுக்கும்போது ஊன்று கோலாம். 415

எவ்வளவாயினும் நல்லவற்றைக் கேட்க;
அவ்வளவிற்குச் சிறந்த பெருமை உண்டு. 416

ஆராய்ந்து உணர்ந்து நிரம்பிய கேள்வியாளர்
தவறியும் அறிவில்லன சொல்லார். 417

கேள்வியறிவு நுழையாத செவிகள்
ஓசை கேட்டாலும் முழுச் செவிடுகளே. 418

நுட்பமான கேள்வியறிவு இல்லாதவர்க்கு
வணக்க ஒடுக்கமான வாய் இராது. 419

செவிச்சுவை தெரியா வாய்ச்சுவை மக்கள்
வெந்தால் என்ன? இருந்தால் என்ன? 420





## கேள்வி

செல்வத்துள் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை. 411

செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். 412

செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து. 413

கற்றில னாயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை. 414

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல். 415

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 416

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்ந்
தீண்டிய கேள்வி யவர். 417

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. 418

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது. 419

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். 420

## அறிவுடைமை

அறிவு குற்றம் தடுக்கும் படை; பகைவரும்
ஊக்கம் அழிக்க முடியாத அரண். 421

சென்ற மனத்தைச் சென்றபடி விடாது
தீது நீக்கி வழிப்படுத்துவதே அறிவு. 422

எச்செய்தியை யார் யாரிடம் கேட்டாலும்
அதன் உண்மையைக் காண்பதே அறிவு. 423

அருமையை எளிமையாக நீ சொல்லுக;
பிறர்கூறும் நுண்மையை விளங்கிக் கொள்ளுக. 424

உலகத்தைத் தழுவிப் போவது சாதுரியம்;
மகிழ்தலும் வருந்தலும் இல்லாதது அறிவு. 425

எங்ஙனம் போகின்றது உலகம் அங்ஙனம்
ஒட்டி வாழ்வதே அறிவுடைமை. 426

மேல்வருவதை அறிபவர் அறிவுடையவர்;
அத்திறமை இல்லாதவர் அறிவில்லாதவர். 427

அஞ்சுவதற்கு அஞ்சாமை பேதைத்தன்மை;
அதற்கு அஞ்சுதல் அறிவுத்தன்மை. 428

வருமுன்னர்க் காக்க வல்ல அறிஞர்க்கு
அதிர்ச்சி தரும் துன்பம் வராது. 429

அறிவுடையவர் அறிவால் எல்லாம் உடையர்;
அறிவிலார் என்ன இருந்தும் இலர். 430





## *அறிவுடைமை*

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண். 421

சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு. 422

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 423

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. 424

உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு. 425

எவ்வ துறைவது உலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு. 426

அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். 427

அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். 428

எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய். 429

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். 430

## குற்றங் கடிதல்

கருவமும் சினமும் இழிவும் இல்லாதவர்
முன்னேற்றம் மேலானது. 431

கஞ்சத் தன்மையும் பொய்யான மானமும்
வேண்டாத மகிழ்ச்சியும் வேந்தன் கேடுகள். 432

சிறுகுற்றம் செய்யினும் பெரிதாக எண்ணுவர்
பழிக்கு நாணும் பெரியவர். 433

குற்றமே குழிதோண்டும் உட்பகை ஆதலின்
குற்றத்தை விழிப்போடு தடுப்பாயாக. 434

குற்றம் வருமுன்னே தடுக்காதவன் வாழ்வு
தீ முன் வைக்கோற் போர் போல அழியும். 435

தன் குறையை நீக்கிப் பிறர்குறை கூறின்
அரசனை யாரும் குறை சொல்லார். 436

செய்வன செய்யாது சிக்கெனப் பிடித்தவனது
செல்வம் தப்பும் வழியன்றிக் கெடும். 437

பொருட் பற்றாகிய கஞ்சத் தன்மை
எத்தன்மையிலும் மிக இழிந்தது. 438

எக்காலத்தும் தன்னைப் புகழாதே;
கெடுதல் வினையை என்றும் விரும்பாதே. 439

தன்விருப்பம் வெளிப்படாதபடி நடப்பின்
பகைவர் சூழ்ச்சிகள் பயன்படா. 440





## குற்றங்கடிதல்

செருக்குஞ் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. 431

இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு. 432

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 433

குற்றமே காக்க பொருளாகக் குறறமே
அற்றம் தரூஉம் பகை. 434

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். 435

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு. 436

செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். 437

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. 438

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. 439

காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். 440

## பெரியாரைத் துணைக்கோடல்

அறமும் முதிர்ந்த அறிவும் உடையவரது
நட்பைத் தெரிந்து பெற்றுக் கொள்க. 441

வந்த துயரைப் போக்கி வருமுன் காக்கும்
திறமுடையவரைத் தழுவிக் கொள்க. 442

பெரியவர்களைப் போற்றி உறவு கொள்வதே
அரிய செயல்களுள் எல்லாம் அரியது. 443

நம்மினும் பெரியவர் நம்மவராக நடப்பது
எல்லா வன்மையினும் ஏற்றமானது. 444

அறிஞர்களே அரசன் கண்கள் ஆதலின்
அவர்களை ஆராய்ந்து அணைத்துக் கொள்க. 445

பெரியவர்கள் துணையாக ஒழுகுபவனைப்
பகைவர்கள் என்ன செய்ய முடியும்? 446

கடிந்துரைக்கும் நண்பர் உடையவரை
யாரும் கெடுக்க முடியுமா? 447

கடிந்துரைப்பார் இல்லாத தனி மன்னன்
பகைவர் இன்றியும் கெடுவான். 448

முதல் இல்லாதவர்க்கு ஊதியம் உண்டோ?
துணை இல்லாதவர்க்கு ஒரு நிலை உண்டோ? 449

நல்லவர் ஒருவர் நட்பை விடுவது
பலரைப் பகைப்பதினும் பெருந் தீமை. 450





## பெரியாரைத் துணைக்கோடல்

அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். 441

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 442

அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 443

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 444

சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல் 445

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். 446

இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். 447

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 448

முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாஞ்
சார்பிலார்க்கு இல்லை நிலை. 449

பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 450

## சிற்றினம் சேராமை

பெரியவர் சிறியவரோடு பழக அஞ்சுவர்;
சிறியார் சிறியாரையே உறவு கொள்வர். 451

மழை தான்விழுந்த மண்தன்மையைப் பெறும்;
அறிவு சேர்ந்த குழுத்தன்மையைப் பெறும். 452

மக்கட்கு மனத்தால் உணர்ச்சி உண்டாம்;
சேர்க்கையால் உரிய மதிப்பு உண்டாம். 453

அறிவு மனத்தை ஒட்டியது போல் தோன்றும்;
உண்மையில் பழகும் இனத்தை ஒட்டியது. 454

மனத் தூய்மை செயல் தூய்மை இரண்டும்
நல்ல கூட்டுறவால் வரும். 455

நன்மனத்தார்க்குப் பின்வழி நன்றாகும்;
நல்லினத்தார்க்கு எல்லாமே நன்றாகும். 456

நன்மனம் உயிர்க்கு ஆக்கம் தரும்;
நற்கூட்டு எல்லாப் புகழும் தரும். 457

சான்றோர்க்கு மனம் நல்லதாக இருப்பினும்
இனமும் நல்லதாக இருப்பது சிறப்பு. 458

நன்மனத்தால் மறுமை யின்பம் கிடைக்கும்;
அதற்கும் நற்கூட்டு நல்லது. 459

நல்ல சேர்க்கையினும் சிறந்த துணையில்லை;
கெட்ட சேர்க்கையினும் வேறு கேடில்லை. 460





## *சிற்றினம் சேராமை*

சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். 451

நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு. 452

மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்
இன்னான் எனப்படுஞ் சொல். 453

மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு. 454

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். 455

மனந்தூயார்க் கெச்சம்நன் றாகும் இனந்தூயார்க்கு
இல்லைநன் றாகா வினை. 456

மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். 457

மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப் புடைத்து. 458

மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து. 459

நல்லினத்தி [illegible]ங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். 460

## தெரிந்து செயல்வகை

அழிவதும் ஆவதும் பின் வரும் ஊதியமும்
எல்லாவற்றையும் எண்ணிச் செய்க. 461

சேர்ந்தவர்களைக் கலந்து செய்பவர்க்குச்
செய்ய இயலாதது ஒன்றுமே இல்லை. 462

வருவதை நம்பி உள்ளதை இழக்கும்
காரியத்தில் ஈடுபடார் அறிவு இருப்பவர். 463

வெட்க உணர்ச்சிக்கு அஞ்சுகின்றவர்
விளங்காத காரியத்தை மேற்கொள்ளார். 464

உட்கூறுகள் தெரியாது செய்யப் புறப்படுதல்
பகைவர் வெற்றிக்குப் பாத்தி பிடிப்பதாகும். 465

செய்ய வேண்டாதன செய்தாற் கெடுவான்;
வேண்டியன செய்யாவிட்டாலும் கெடுவான். 466

நன்றாக நினைத்துக் காரியத்தில் இறங்குக;
இறங்கியபின் பார்க்கலாம் என்பது தவறு. 467

முறைப்படி உழையாத உழைப்பு
பலர்துணை இருப்பினும் ஓட்டைபடும். 468

அவரவர் இயல்பு அறிந்து செய்யாவிடின்
நன்மை செய்வதும் தவறாகி விடும். 469

உன் நிலைக்கு ஏற்காததை உலகம் ஏற்காது;
உலகம் இகழாதவற்றை எண்ணிச் செய்க. 470





## தெரிந்து செயல்வகை

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல். 461

தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல். 462

ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். 463

தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர். 464

வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. 465

செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். 466

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு. 467

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். 468

நன்றாற்ற லுள்ளுந் தவறுண்டு அவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. 469

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு. 470

## வலியறிதல்

செயல், தான், பகைவன், துணைவன் என்ற எல்லா வன்மைகளையும் சீர்தூக்கிச் செய்க. 471

இயலும் செயலையும் அறிவையும் தெரிந்து நடப்பார்க்கு நடவாதது இல்லை. 472

ஆற்றல் அறியாது ஆர்வத்தால் செய்து இடையிலே நொடித்தவர் மிகப் பலர். 473

அமைத்தபடி நடவாதவன் அளவறியாதவன் தன்னைப் புகழ்ந்தவன் சடுதியிற் கெடுவான். 474

மயிலிறகையும் அளவுக்கு மிஞ்சி ஏற்றினால் பாரவண்டியும் அச்சு முறிந்து விடும். 475

நுனிக்கொம்பில் ஏறியவர் மேலும் ஏறின் உயிர்க்கு முடிவுகாலம் வந்துவிடும். 476

முறைப்படி பொருள்நிலை அறிந்து கொடுக்க; அதுவே மேன்மேலும் கொடுக்கும் நெறியாம். 477

வருவாய் அளவாக இருப்பினும் கேடில்லை; செலவு மட்டும் விரிதல் கூடாது. 478

பொருள்நிலை அறிந்து வாழாதவன் வாழ்க்கை இருப்பதுபோல ஒன்றும் இராது. 479

உள்ள நிலை பாராது ஊர் நன்மை செய்தாலும் செல்வநிலை விரைவில் சீரழியும். 480





## *வலியறிதல்*

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். 471

ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல். 472

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். 473

அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். 474

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். 475

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 476

ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. 477

ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை. 478

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 479

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். 480

## காலம் அறிதல்

காக்கை கோட்டானைப் பகலில் வென்றுவிடும்;
வேந்தர் வெல்லும் காலம் பார்க்க வேண்டும். 481

காலம்பார்த்து ஏற்ப நடப்பது நிலையாகச்
செல்வத்தைக் கட்டும் கயிறாகும். 482

ஆற்றலோடு காலமும் அறிந்து செய்யின்
செய்தற்கு அரியதென ஏதும் உண்டோ? 483

காலமும் இடமும் கணித்துச் செய்யின்
உலகமே வேண்டினும் கிடைக்கும். 484

ஞாலம் முழுதும் ஆளக் கருதுபவர்
காலம் பார்த்துக் கலங்காது இருப்பர். 485

ஊக்கம் உடையவன் ஒடுங்கி இருப்பது
சண்டைக்கடா பின்வாங்கும் குறிப்பாகும். 486

அறிவுடையார் வெளிப்படக் கொதிப்படையார்;
காலம் பார்த்து உட்கொதிப்பு அடைவர். 487

பகைவரைக் காணும்போது பணிக;
காலம் வந்தபோது அவர் கவிழ்வர். 488

கிடைத்தற்கு அரியது கிடைத்தால் உடனே
செய்தற்கு அரியதைச் செய்து கொள்க. 489

ஒடுங்கிய காலத்துக் கொக்குப் போல்க;
சிறந்த காலத்து அதன் குத்துப் போல்க. 490





## காலம் அறிதல்

பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு. 482

அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின். 483

ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின். 484

காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர். 485

ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. 486

பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர். 487

செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை. 488

எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல். 489

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 490

## இடன் அறிதல்

முழுதும் வாய்ப்பான இடம் பெறும்வரை
எச்செயலையும் தொடங்காதே புறக்கணியாதே. 491

வேறுபட்ட ஆற்றல் உடைய அரசர்க்கும்
அரண்துணை பல நன்மை அளிக்கும். 492

இடம்பார்த்து விழிப்போடு பகைவரிடம் நடப்பின்
வலியிலாரும் வலிபெற்றுப் போரிடுவர். 493

இடம் பார்த்துப் பிடியை விடாது செய்யின்
பகைவர் தம் சூழ்ச்சியைக் கைவிடுவர். 494

தண்ணீரில் முதலை எதனையும் வெல்லும்;
தரையில் முதலையை எதுவும் வெல்லும். 495

நல்ல பெரியவண்டியும் கடலில் ஓடாது.
நீரோடும் கப்பலும் நிலத்தில் ஓடாது. 496

முழுதும் எண்ணி இடமறிந்து செய்யின்
துணிச்சல் தவிரப் பிறதுணை வேண்டாம். 497

படை குறைந்தவனுக்கு ஏற்ற இடம் சென்றால்
படைநிறைந்தவன் உள்ளம் சோர்வடைவான். 498

நல்லரணும் சிறப்பும் இல்லை யெனினும்
எதிரியை வாழுமிடத்தில் தாக்க இயலாது. 499

வேல்வீரர்களைக் குத்தி எடுத்த யானையையும்
சேற்று நிலத்தில் நரி கொன்று விடும். 500





## இடன் அறிதல்

தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது. 491

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும். 492

ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின். 493

எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 494

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. 495

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. 496

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின். 497

சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும். 498

சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது. 499

காலாழ் களரில் நரியடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு. 500

## தெரிந்து தெளிதல்

அறம்பொருள் இன்பம் உயிர்க்கு அஞ்சுதல்
இவ்வகையால் ஒருவனை ஆராய்ந்து தெளிக. 501

நற்குடியிற் பிறந்து குற்றம் இல்லாமல்
பழிக்கு நாணுபவனே நம்பத் தக்கவன். 502

சிறந்தவை கற்றுத் தெளிந்தவர் இடத்தும்
பார்த்தால் ஓரளவு அறியாமை இருக்கும். 503

ஒருவர் குணங்களையும் குற்றங்களையும் பார்த்து
அவற்றுள் மிகுதியைக் கொண்டு தெளிக. 504

இவர் பெரியவர் இவர் சிறியவர் என்று அறிய
அவரவர் செயலே உரைகல்லாகும். 505

மிக வறியவரை நம்பாதே; ஏன்? அவர்
எப்பிடிப்பும் இல்லார்; பழிக்கும் அஞ்சார். 506

அன்பு காரணமாக அறிவிலாதவரை நம்புதல்
எல்லா மடமையும் தரும். 507

ஆராயாது எவனோ ஒருவனை நம்பினால்
வழிவழித் தீராத துன்பம் வரும். 508

ஆராயாது யாரையும் எளிதில் நம்பாதே;
ஆய்ந்த பின்னும் நம்பும் பொருளை நம்புக. 509

ஆராயாது நம்புதலும் பெருந்துன்பமே;
நம்பியவனை ஐயப்படுத்தலும் பெருந்துன்பமே. 510





## தெரிந்து தெளிதல்

அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். 501

குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு. 502

அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு. 503

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 504

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 505

அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. 506

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும். 507

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். 508

தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். 509

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும். 510

## தெரிந்து வினையாடல்

ஒரு செயலின் நன்மையும் தீமையும் பார்த்து
நலஞ்செய்வானை வேலைக்குக் கொள்க. 511

வருவாய் பெருக்கி வளஞ் செய்து மேலும்
ஆராய்பவனே காரியம் செய்யத் தக்கவன். 512

அன்பு அறிவு தெளிவு ஆசையின்மை
நான்கும் உடையவனே நம்பத் தக்கவன். 513

எவ்வாறு தெளிந்தாலும் காரியத்தின் போது
வேறாக நடப்பவரே மிகப் பலர். 514

ஒருவினையை அறிந்து முடிப்பவனிடமே ஏவுக;
பெயர்பெற்றவன் என்பதற்காக ஏவற்க. 515

செய்பவன் தன்மையையும் செய்யும் செயலையும்
ஏற்ற காலத்தையும் உணர்ந்து செய்க. 516

இச்செயலை இம்முறையால் இவன் முடிப்பான்
என்று தெளிந்து வினையை ஒப்படைக்க. 517

வினைக்குத் தக்கவன் என்று தெளிந்தபின்பு
அவனை முழுப் பொறுப்பு உடையவன் ஆக்குக. 518

காரியத்தில் கருத்தாக இருப்பவன் பண்பைத்
தவறாக நினைத்தால் செல்வம் தவறும். 519

அரசன் நாள்தோறும் அலுவலரை ஆராய்க;
அவர் பிசகாவிடின் நாடு பிசகாது. 520





## தெரிந்து வினையாடல்

நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும். 511

வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை. 512

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 513

எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர். 514

அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தானென்று ஏவற்பாற் றன்று. 515

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல். 516

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல். 517

வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். 518

வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு. 519

நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. 520

## சுற்றந் தழால்

பற்றில்லாத போதும் பழைய உறவைப்
போற்றுதல் சுற்றத்தாரிடமே உண்டு. 521

அன்பு குறையாத சுற்றம் இருப்பின்
வளர்ச்சி குறையாத முன்னேற்றம் வரும். 522

கலந்து பழகாதவன் வாழ்க்கை பெருகாது;
குளம் கரையின்றி நீர் நிரம்புமா? 523

சுற்றத்தார் சுற்றி இருக்குமாறு உதவுவதே
செல்வம் பெற்றால் பெறவேண்டும் பயன். 524

கொடுத்தல் இன்சொல் இரண்டும் இருந்தால்
சுற்றப்படை சூழ்ந்து விடும். 525

கொடுப்பான் கடுகடுக்க மாட்டான் என்றால்
அவன்போல் சுற்றமுடையார் உலகத்தில்லை. 526

காக்கை தன் சுற்றத்தை அழைத்து உண்ணும்;
அப்பண்பினர்க்கே முன்னேற்றம் உண்டு. 527

அரசன் பொதுமையின்றிச் சிறப்பாக நோக்கின்
அதனால் வாழும் சுற்றத்தார் பலர். 528

கிளையாகிப் பிரிந்தவரும் அவர் உறவினரும்
வெறுப்பு நீங்கியபின் விரும்பிவந்து கூடுவர். 529

இருந்து பிரிந்து ஒரு நோக்கத்தோடு வந்தவனை
அரசன் பொறுத்துப்பார்த்து ஏற்றுக் கொள்க. 530





## சுற்றந் தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 521

விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும். 522

அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. 523

சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன். 524

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும். 525

பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்து இல். 526

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள. 527

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். 528

தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும். 529

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல். 530

## பொச்சாவாமை (மறவாமை)

பெரிய மகிழ்ச்சிக்கிடையே காரியத்தை மறத்தல்
மிகுந்த சினத்தைக் காட்டிலும் தீது. 531

நாளும் வறுமை அறிவை அழிக்கும்;
நாளும் மறதி புகழை அழிக்கும். 532

மறதி உடையார்க்குப் புகழ்வாழ்வு இல்லை;
இது எல்லா ஆசிரியர்க்கும் முடிந்த முடிவு. 533

மறதிவாய்ப் பட்டார்க்கு எந்நலமும் இல்லை;
அஞ்சிக் கிடப்பார்க்கு அரண் உண்டோ? 534

நினைவோடு முன்னே தடுக்காது மறந்தவன்
தன்பிழைக்குப் பின்னே வருந்தி இரங்குவான். 535

மறவாத தன்மையைத் தவறாது பெற்றால்
அதுபோன்ற ஆற்றல் வேறில்லை. 536

மறவாத கருவி கொண்டு விழிப்போடு செய்தால்
முடியாத காரியம் என்பது யாதும் இல்லை. 537

புகழ்தரும் வினைகளை மதித்துச் செய்க;
செய்யாது விட்டவர்க்கு என்றும் வாழ்வில்லை. 538

நீ மகிழ்ச்சியிலே திளைத்திருக்கும் போது
அங்ஙனம் இருந்து கெட்டாரை எண்ணிப்பார். 539

எண்ணியதை மறவாதே எண்ண முடிந்தால்
எண்ணியதை எளிதில் எய்திவிடலாம். 540





## *பொச்சாவாமை*

இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு. 531

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 532

பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுவுலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு. 533

அச்ச முடையார்க்கு அரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 534

முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கி விடும். 535

இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அதுவொப்பது இல். 536

அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின். 537

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 538

இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 539

உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின். 540

## செங்கோன்மை (நல்லாட்சி)

கேட்டு ஒருபக்கம் சாயாது தண்டித்து
யாரையும் ஆராய்ந்து செய்வதே நீதி. 541

உயிரெல்லாம் மழையை எதிர்பார்த்து வாழும்;
குடியெல்லாம் நல்லாட்சியை நோக்கி வாழும். 542

அருளாளர்தம் நூலுக்கும் அறத்துக்கும்
அடிப்படை அரசனது ஆட்சியே. 543

குடிகளை அணைத்து ஆளும் பெருவேந்தனது
அடிகளைப் பற்றி உலகம் நிற்கும். 544

முறையாக அரசாளும் மன்னவன் நாட்டில்
மழையும் விளைச்சலும் இரண்டும் இருக்கும். 545

அரசனுக்கு வெற்றி தருவது வேலில்லை;
அவனது நேரான செங்கோல் ஆட்சியே. 546

நாட்டை யெல்லாம் அரசன் காப்பான்;
குறையற்ற நீதி அவனைக் காக்கும். 547

இரக்கமாகப் பார்த்து முறைவழங்கா அரசன்
தன் குற்றத்தால் தானே கெடுவான். 548

நற்குடியைக் காத்துத் தீயகுடியைத் தண்டித்தல்
பழியில்லை; வேந்தனது கடமை. 549

கொடியவர்க்கு அரசு கொலைத்தண்டனை செய்தல்
பயிர்வளரக் களைபறிப்பது போலும். 550





## செங்கோன்மை

ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. 541

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. 542

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 544

இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. 545

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின். 546

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 547

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும். 548

குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில். 549

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். 550

## கொடுங்கோன்மை

குடிகளை வருத்தித் தீமை புரியும் வேந்தன்
கொலையாளியினும் கொடியவன். 551

கோலுடைய அரசன் குடிகளிடம் பொருள்கேட்டல்
வேலுடைய திருடன் கெஞ்சுவதை ஒக்கும். 552

நாள்தோறும் ஆராய்ந்து ஆளாத அரசனது
நாடு நாளும் கெட்டுக்கொண்டே போகும். 553

நீதிதவறி ஆராயாது செய்யும் அரசன்
பொருளும் குடி , - ஒரு சேர இழப்பான். 554

கொடுமை தாங்காது குடிகள் அழுத கண்ணீர்
அரசை அடியோடு அழிக்கும் படையாகும். 555

மன்னனுக்கு நிலை நல்லாட்சியால் உண்டாகும்;
அது இன்றேல் அவன் அதிகாரம் நிலையாது. 556

மழையின்றேல் உலகம் என்னாகும்?
அரசனது அன்பின்றேல் குடிகள் வாழுமா? 557

நீதியில்லா மன்னனது ஆட்சிக்கு உட்படின்
பொருளின்மையினும் உடைமை கேடுதரும். 558

மன்னவன் நீதிமுறையோடு ஆளாவிட்டால்
மழை பருவமுறையோடு பெய்யாது போம். 559

காத்தற்கு உரிய அரசன் காவாவிடின்
பசு பயன்தாராது; எத்தொழில்களும் இரா. 560





## *கொடுங்கோன்மை*

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்தொழுகும் வேந்து. 551

வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். 553

கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. 554

அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி. 556

துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. 557

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். 558

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின். 560

## வெருவந்த செய்யாமை

தக்கபடி ஆய்ந்து மேலும் குற்றம் செய்யாவாறு
பொருந்தத் தண்டிப்பவனே வேந்தன். 561

நெடுநாள் ஆக்கம் நிலைக்க விரும்புபவர்
வன்மையாக ஓங்கி மெல்ல அடிப்பாராக. 562

குடிகளை மிரட்டும் கொடிய வேந்தன்
கட்டாயம் விரைந்து அழிவான். 563

அரசன் கடுமையன் என்று குடிகள் கூறின்
இடஞ்சுருங்கி விரைந்து அழிவான். 564

பார்க்க அருமையும் முகங்கடுமையும் உடையவன்
பெருஞ்செல்வம் பேய்காத்தது போலும். 565

கண்ணிலும் சொல்லிலும் கடுமையன் ஆயின்
அவன் நெடுஞ்செல்வம் நாளாகாமல் கெடும். 566

கடுஞ்சொல்லும் அளவுகடந்த தண்டனையும்
அரசனது படைவலியை அறுக்கும் அரம். 567

அரசன் அமைச்சரைக் கலந்து செய்யாது
சினங்கொண்டு செய்யின் செல்வம் சுருங்கும். 568

போர்க்காலத்துத் தீயகுடியைச் சிறையிடாத
அரசன் கலங்கி வெதும்பி அழிவான். 569

கடும்ஆட்சி அரசியல் கல்லாதவரையே கவரும்;
நாட்டுக்குப் பாரம் அவ்வாட்சியே, பிறிதில்லை. 570





## *வெருவந்த செய்யாமை*

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. 561

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 562

வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும். 563

இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும். 564

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்னது உடைத்து. 565

கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். 566

கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். 567

இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறின் சிறுகும் திரு. 568

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 569

கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை. 570

## கண்ணோட்டம் (இரக்கம்)

இரக்கம் என்னும் அழகிய பெரும்பண்பு
இருத்தலால் இவ்வுலகம் இருக்கின்றது. 571

உலகியல் என்பது இரக்கப்பண்பில் உள்ளது;
இரக்கமில்லார் இருப்பது பூமிக்குப் பாரம். 572

பாட்டுக்குப் பொருந்தாத இசையாற் பயனென்?
இரக்கம் காட்டாத கண்ணால் என்ன பயன்? 573

வேண்டும் அளவு இரக்கம் ஓடாத கண்
முகத்தில் இருப்பதுபோல் காட்டுவது எதற்கு? 574

கண்ணிற்கு நகையாவது இரக்க உணர்வே;
இரக்கமிலாக் கண்ணைப் புண்ணென்று கொள்க. 575

கண்ணோ டிருந்தும் இரக்கம் இல்லாதவர்
மண்ணோ டிருந்தும் வளராத மரம் போல்வர். 576

இரக்கம் இல்லாதவர் கண்ணில்லாதவர்
கண்ணுடையவர் இரக்கம் உடையவர். 577

காரியம் கெடாமல் இரக்கம் காட்டுவார்க்கு
வயப்பட்டது இவ்வுலகம். 578

தண்டிக்கும் ஆற்றல் இருப்பினும் மனமிரங்கிப்
பொறுத்துக் கொள்ளும் பண்பே சிறந்தது. 579

யாவரும் விரும்பும் நாகரிகம் உடையவர்
நேரே நஞ்சிடினும் உண்டு அடங்குவர். 580





## கண்ணோட்டம்

கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு. 571

கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 572

பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். 573

உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண். 574

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும். 575

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். 576

கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல். 577

கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு. 578

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. 579

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 580

## ஒற்றாடல் (உளவு)

உளவும் புகழ்பெற்ற நீதிநூலும் இரண்டும்
மன்னவனுக்குக் கண்கள் என்று தெளிக. 581

யாரிடத்தும் எதனையும் என்றும் உளவால்
விரைந்து அறிதல் வேந்தன் கடமை. 582

உளவால் செய்தி அறிந்துகொள்ளாத அரசன்
கொள்ளும் வெற்றி எதுவும் இல்லை. 583

வினையார் சுற்றத்தார் பகைவர் என்ற
எத்திறத்தாரையும் ஆராய்வது உளவு. 584

ஐயப்படாத வடிவோடு அஞ்சாது பார்த்து
எவ்விடத்தும் வெளியிடாதவனே ஒற்றன். 585

துறவு வேடங்கொண்டு எவ்விடமும் புகுந்து
என்ன நேரினும் வாய்விடாதவனே ஒற்றன். 586

மறைவான செய்திகளை ஒட்டுக் கேட்டு
அறிந்தவற்றில் தெளிவுடையவனே ஒற்றன். 587

ஓர் உளவாளி கொண்டுவந்த செய்தியையும்
பின்னும் ஓர் உளவாளியால் தெளிக. 588

உளவாளிகளைத் தம்முள் தெரியாவாறு ஆள்க;
மூவர்க்கும் ஒத்த செய்தி நம்பத்தகும். 589

பலரறிய ஒற்றனுக்குச் சிறப்புச் செய்யாதே;
செய்யின் மறைவு வெளிப்படுத்தியதாகும். 590





## ஒற்றாடல்

ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண். 581

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில். 582

ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்தது இல். 583

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று. 584

கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று. 585

துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று. 586

மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று. 587

ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல். 588

ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும். 589

சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகும் மறை. 590

## ஊக்கம் உடைமை

ஊக்கமே சொத்தாகும்; அது இல்லாதவர்
பிற இருப்பினும் சொத்துடையர் ஆகார். 591

ஊக்கச் சொத்தே சொத்து; பொருட்சொத்து
நில்லாது போய்விடும். 592

ஊக்கத்தைத் திண்ணமாகக் கையில் கொண்டவர்
செல்வம் போயிற்றென்று வருந்தார். 593

சோர்வில்லா ஊக்கம் உடையவனது
வீட்டுவழி கேட்டுச் செல்வம் சேரும். 594

மலரின் நீளம் நீரின் அளவு; மாந்தர்தம்
வாழ்வின் உயர்ச்சி ஊக்கத்தின் அளவு. 595

நினைப்பதெல்லாம் உயர்வையே நினைக்க;
உயர்வு வராவிடினும் அந்நினைவை விடாதே. 596

உறுதியாளர் அழிவிலும் ஊக்கம் தளரார்;
அம்புகள் தைத்தாலும் யானை வலிபொறுக்கும். 597

உலகத்தில் பெருஞ்செல்வன் என்னும் சிறப்பை
ஊக்கம் இல்லாதவர் அடையார். 598

பருமனும் கூரிய கொம்பும் இருந்தும்
புலி தாக்கினால் யானையும் அஞ்சுமே. 599

ஊக்க மிகுதியே வலிமை; அது இல்லாதவர்
நிலையால் மரம்: வடிவால் மானிடர். 600





## ஊக்கம் உடைமை

உடைய ரெனப்படுவது ஊக்கம் அஃதிலார்
உடையது உடையரோ மற்று. 591

உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். 592

ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். 593

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை. 594

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு. 595

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து. 596

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றும் களிறு. 597

உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு. 598

பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

உரமொருவற்கு உள்ள வெறுக்கை அஃதிலார்
மரம்மக்க ளாதலே வேறு. 600

## மடி இன்மை

குடும்பம் என்னும் அணையாத விளக்கு
சோம்பல் என்னும் இருளால் அணைந்துவிடும். 601

குடும்பம் சிறந்த குடும்பமாக விரும்புபவர்
சோம்பலை அழித்து முயற்சியாக நடக்க. 602

சோம்பலை மடியிற் கொண்டிருக்கும் மடவன்
பிறந்தகுடி அவனுக்குமுன் விரைந்தழியும். 603

சோம்பலிற் பட்டுச் சுறுசுறுப்பு இல்லாதவர்க்குக்
குடும்பமும் அழியும், குற்றமும் பெருகும். 604

காலத்தாழ்வு மறதி சோம்பல் உறக்கம்
இவை கெடுவார் ஆசைப்படும் நகைகள். 605

நாடு ஆள்பவரின் நல்லுறவு இருப்பினும்
சோம்பேறி பெரும்பயன் அடையான். 606

சோம்பலில் ஆழ்ந்து நல்லுழைப்பை விட்டவர்
பலரால் இடிபட்டு இகழப்படுவார். 607

குடும்பத்தில் சோம்பல் குடிபுகுந்து விட்டால்
பகைவர்க்கு அடிமையாகி விடுவோம். 608

குடும்பம் நடத்துகையில் வந்த குறைபாடுகள்
சோம்பலை ஒழிக்கவே நீங்கிப்போம். 609

திருமால் தாண்டிய உலகம் முழுதும்
சோம்பல் இல்லா மன்னவன் அடைவான். 610





## மடி இன்மை

குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். 601

மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 602

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து. 603

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. 604

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். 605

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது. 606

இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். 607

மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும். 608

குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். 609

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு. 610

## ஆள்வினை உடைமை (முயற்சி)

அரிய காரியம் என்று மலைக்க வேண்டாம்;
முயற்சி எல்லாப் பெருமையும் தரும். 611

எடுத்த வினையை அரைகுறையின்றிச் செய்க;
கடமையை விட்டாரை உலகம் விட்டு விடும். 612

பிறர்க்கு உதவும் பெருமித எண்ணம்
உழைக்கின்ற பெரும்பண்பால் உண்டாகும். 613

உழைப்பில்லாதவன் யார்க்கும் உதவ முடியுமா?
பேடி பகைவர்முன் வாள் வீச முடியுமா? 614

இன்பம் நாடாது காரிய முடிவை நாடுபவன்
சுற்றத்தின் துன்பம் தாங்கும் தூணாவான். 615

உழைப்பு செல்வ நிலையை உண்டாக்கும்;
உழையாமை வறுமையைத் தந்துவிடும். 616

சோம்பேறியின் மடியில் இருப்பாள் மூதேவி;
உழைப்பவன் அடியில் இருப்பாள் சீதேவி. 617

உடல் ஊனம் யார்க்கும் பழியில்லை;
அறிவை வளர்த்து முயலாமையே பழி. 618

தெய்வத்தால் ஒரு செயல் முடியாது போகினும்
முயன்றால் அதற்குரிய கூலி உண்டு. 619

சோர்வின்றிக் காலம் தாழ்க்காது உழைப்பவர்
மாறான விதியும் ஓடக் காண்பர். 620





## ஆள்வினை உடைமை

அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 611

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு. 612

தாளாண்மை என்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னுஞ் செருக்கு. 613

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். 614

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண். 615

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். 617

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. 618

தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். 620

## இடுக்கண் அழியாமை

துன்பம் வரும்போது கேலிசெய்க; அதுவே
துன்பத்தைக் கடக்க வழி. 621

வெள்ளம் போன்ற நெருக்கடியும் அறிஞன்
ஊக்கத்தினால் நினைக்கவே ஓடிப்போம். 622

துன்பங் கண்டு துன்பப் படாதவர்
துன்பத்தைத் துன்பப் படுத்துவர். 623

கடினப்பாதை செல்லும் காளைபோன்றவனுக்கு
வந்த துன்பமன்றோ துன்பப்படும். 624

அடுக்கடுக்காக வரினும் அசையாதவனுக்கு
வந்த துயரமன்றோ துயரப்படும்! 625

செல்வம் வந்தபோது பற்றற்று இருப்பவர்
போனபோது துயரப் படுவாரோ? 626

இவ்வுடம்பு நோய்களுக்கு இலக்கு என்று
இயல்பறிந்த மேலோர் கலக்கம் கொள்ளார். 627

இன்பத்தை விரும்பாது இடையூற்றை இயல்பு
என்று கருதுபவன் வருத்தம் அடையான். 628

மகிழ்ச்சியில் மகிழ்ச்சி அடையாதவன்
கவலையில் கவலை அடையான். 629

துன்பத்தை இன்பமாகக் கருதுபவனுக்கு
எதிரியின் மதிப்பும் கிடைக்கும். 630





## இடுக்கண் அழியாமை

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல். 621

வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். 622

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர். 623

மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும். 625

அற்றேமென்று அல்லற் படுபவோ பெற்றேமென்று
ஓம்புதல் தேற்றா தவர். 626

இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல். 627

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன். 628

இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன். 629

இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. 630

## அமைச்சு

கருவி காலம் செய்யுந்தன்மை காரியம்
இவற்றில் நன்கு சிறந்தவனே அமைச்சன். 631

துணிவு குடிபேணல் கல்வி அறிவு முயற்சி
இவ்வைந்திலும் சிறந்தவனே அமைச்சன். 632

பகைவரைப் பிரித்தல் நண்பரை அணைத்தல்
பிரிந்தவரைக் கூட்டல் வல்லன் அமைச்சன். 633

ஆராய்தல் தெளிந்து செய்தல் உறுதியாகச்
சொல்லுதல் வல்லவனே அமைச்சன். 634

அறமும் அமைந்த சொல்லும் திறமும்
உடையவனே தெளிவுக்குத் துணையாவான். 635

கூரிய அறிவும் நூலறிவும் உடையவர்க்குத்
தீர்க்க முடியாத சிக்கல்கள் உளவோ? 636

நூல்சொல்லும் முறைகளை அறிந்திருந்தாலும்
உலக நடைமுறைகளை அறிந்து செய்க. 637

சொன்னாலும் தன்னாலும் அறியான் எனினும்
அரசனுக்கு உறுதிகூறல் அமைச்சன் கடன். 638

கேடு சூழும் ஒரு மந்திரியினும் அருகே
எழுபது கோடி பகைவர் நல்லவர். 639

முறையாக எண்ணினும் முடியாதபடி செய்வர்
செய்யும் திறமை இல்லாதவர். 640





## அமைச்சு

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு. 631

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு. 632

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு. 633

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு 634

அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை 635

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாஉள முன்னிற் பவை. 636

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல். 637

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 638

பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும். 639

முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்
திறப்பாடு இலாஅ தவர். 640

## சொல்வன்மை

நாவன்மை ஒருவர்க்கு நல்ல சொத்து;
அது எல்லா நன்மையினும் சிறந்தது. 641

சொல்லால் ஆக்கமும் வரும், கேடும் வரும்.
ஆதலின் சொல்லை விழிப்போடு சொல்லுக. 642

கேட்டாரைக் கவர்ந்து கேளாதாரையும்
கேட்கத் தூண்டுவதே சொல்வன்மை. 643

சொல்லின் ஆற்றலை அறிந்து சொல்லுக;
அதுவே அறமாம்; பொருளாம். 644

வேறு சொல்லும் சொல்லலாம் என இடமின்றி
முதலிலேயே பலிக்கும் சொல்லைச் சொல்லுக. 645

கேட்குமாறு சொல்லல் பிறர்சொல்லக் கேட்டல்
இவை நல்லறிஞரின் கொள்கை. 646

சொல்வன்மை சோர்வின்மை அச்சமின்மை
உடையவனை யாரும் வெல்ல முடியாது. 647

முறையாக இனிது சொல்லுவோமாயின்
நம் சொற்படி உலகம் விரைந்து நடக்கும். 648

நல்லவற்றைச் சுருக்கமாகச் சொல்லத்
தெரியாதவரே பலபடப் பேச ஆசைப்படுவர். 649

கற்றதை எடுத்துச் சொல்ல முடியாதவர்
மணமில்லாத கொத்துமலர் போன்றவர். 650





## சொல்வன்மை

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று. 641

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. 642

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். 643

திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல். 644

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து. 645

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள். 646

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. 647

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 648

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். 649

இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார். 650

## வினைத்தூய்மை

நல்ல துணை முன்னேற்றத்தைத் தரும்;
நல்ல செயல் வேண்டியன எல்லாம் தரும். 651

புகழும் நன்மையும் தராத காரியத்தை
என்றும் ஒழித்துவிட வேண்டும். 652

முன்னேற வேண்டும் என்பவர் மதிப்புக்
குறையும் காரியங்களைக் கொள்ளாது விடுக. 653

அதிராத அறிஞர் நெருக்கடிபட்டாலும்
இழிந்த செயல்களைச் செய்யார். 654

என்செய்தேன் என்று பின்வருந்தும் செயலைச்
செய்யாதே; செய்தால் திரும்பவும் செய்யாதே. 655

பெரியவர் பழிக்கும் தீய வினைகளை
நின்தாய் பசித்துக் கிடந்தாலும் செய்யாதே. 656

நல்லவர் பழிதூடி எய்தும் செல்வத்தினும்
அவர்தம் வறுமையே பெருமையுடையது. 657

விலக்கியவற்றை விலக்காது செய்தவர்க்குக்
காரியம் முடிந்தாலும் துன்பம் உண்டாகும். 658

பிறர் அழக்கொண்டவை நாம் அழப்போகும்;
நல்லவை முன் தொலையினும் பின் பயன்தரும். 659

ஏமாற்றிக் கொண்ட பொருள் நிலைக்காது;
சுடாத மண்பானையில் நீர் தங்குமா? 660





## வினைத்தூய்மை

துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும். 651

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 652

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர். 653

இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். 654

எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. 655

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. 656

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. 657

கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். 658

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. 659

சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று. 660

## வினைத்திட்பம்

வினையுறுதி என்பது நம் நெஞ்சுறுதி;
மற்றையவை உறுதியாகா. 661

வருமுன் காத்தல், வந்தால் தளராமை
இவ்விரண்டே அறிஞர் கண்ட வழிகள். 662

முடிந்தபின் வெளியாம்படி செய்வதே திறமை;
இடையே வெளிப்படின் பெருந்துன்பம் வரும். 663

அழகாகச் சொல்லுதல் யார்க்கும் முடியும்;
சொன்னபடி செய்தலே முடியாது. 664

பெருமிதம் மிக்கவரின் வினைத்திறத்தை
வேந்தன் கேள்விப்பட்டு மதிப்பான். 665

எண்ணியவற்றை எண்ணியபடியே எய்தலாம்
எண்ணியவர் உறுதியாக எண்ணினால். 666

ஆளின் தோற்றம் பார்த்து இகழவேண்டாம்;
ஓடும் வண்டி பெரிது; அச்சாணி சிறிது. 667

கலங்காது கண்ட காரியத்தைத் தளராது
காலம் தாழ்த்தாது செய்க. 668

துன்பம் மேன்மேலும் வந்தாலும் துணிவோடு
இன்பந்தரும் காரியத்தைச் செய்க. 669

என்ன உறுதியிருந்தாலும் எடுத்துக்கொண்ட
வினையில் உறுதியிலாரை உலகம் விட்டுவிடும். 670





## *வினைத்திட்பம்*

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற. 661

ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள். 662

கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்
எற்றா விழுமந் தரும். 663

சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல். 664

வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும். 665

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். 666

உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து. 667

கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கங் கடிந்து செயல். 668

துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை. 669

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு. 670

## வினைசெயல் வகை

ஆராய்ந்து ஒரு துணிவுக்கு வரவேண்டும்;
அத்துணிவைச் செய்யாது தாழ்த்தல் தீதாகும். 671

தாழ்த்துச்செய்யும் வினையைத் தாழ்த்துச்செய்க;
உடனே செய்ய வேண்டியதைக் கடத்தாதே. 672

முடிந்தவரை தூதால் முடித்துக்கொள்ளல் நன்று;
முடியாக்கால் பலிக்குமுறை பார்த்துச் செய்க. 673

காரியக்குறை பகைக்குறை என்ற இரண்டும்
நெருப்புக்குறை போல வளர்ந்து அழிக்கும். 674

பொருள் கருவி காலம் செயல் இடம் என்ற
ஐந்தினையும் மயக்கமற ஆராய்ந்து செய்க. 675

முடிவும் இடையூறுகளும் முடிந்த பின்னர்
வரும் பயனும் பார்த்துச் செய்க. 676

ஒருசெயலைச் செய்பவன் செய்யும்முறை அதனை
நன்கறிந்தவனது உறுதியைப் பெறுதல். 677

யானையைக் கொண்டு யானை பிடிப்பதுபோல
ஒருசெயலால் இன்னொன்றையும் செய்துகொள். 678

நண்பர்க்கு நல்லன செய்தலைக் காட்டினும்
விரைவாகப் பகைவரை அணைத்தல் வேண்டும். 679

சிற்றரசர் குடிமக்கள் நடுங்குவது கண்டு
தாதுவரின் பேரரசரைப் பணிந்து கொள்வர். 680





## *வினைசெயல்வகை*

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 671

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 672

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 673

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். 674

பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 675

முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 676

செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளம் கொளல். 677

வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 678

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல். 679

உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 680

## தூது

அன்பும் குடிப்பிறப்பும் அரசர்கள் விரும்பும்
பண்பும் தூதுவனுக்கு உரிய தகுதிகள். 681

அன்பு அறிவு தெளிந்த பேச்சுவன்மை
மூன்றும் தூதுவனுக்கு இன்றியமையாதவை. 682

பகைவர்முன் வெற்றித்தூது சொல்பவன்
கற்றவருள் கற்றவனாக விளங்க வேண்டும். 683

அறிவு தோற்றம் தெளிந்த கல்வி இவற்றில்
நிறைந்தவன் தூது செல்வானாக. 684

விடாது சொல்லி விடுவனவற்றை விட்டுச்
சிரிக்கப்பேசி நலம் செய்பவனே தூதன். 685

கற்று அஞ்சாது எடுத்துச் சொல்லிச்
சமயத்துக்கு ஏற்றது அறிந்தவனே தூதன். 686

கடமை காலம் இடம் இவற்றைப் பார்த்துச்
சிந்தித்து உரைப்பவனே சிறந்த தூதன். 687

தூய்மை துணை துணிவு இம் மூன்றும்
நன்கு வாய்த்தல் தூதுவன் தகுதியாம். 688

பழிச் செய்தியை வாய்விடா உறுதியாளனே
பகைவர்முன்சென்று செய்திகூறத் தக்கவன். 689

தனக்குச் சாவு வரினும் தன் அரசனுக்குக்
குறையாத நலம் செய்பவனே தூதன். 690





## தூது

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. 681

அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று. 682

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683

அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. 684

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. 685

கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்கது அறிவதாம் தூது. 686

கடனறிந்து காலம் கருதி இடனறிந்து
எண்ணி உரைப்பான் தலை. 687

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688

விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். 689

இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது. 690

## மன்னரைச் சேர்ந்தொழுகல்

மன்னரொடு பழகுபவர் குளிர்காய்வார் போல்
மிக நீங்காமலும் மிக நெருங்காமலும் பழகுக. 691

அரசர் விரும்புவனவற்றை விரும்பாவிடின்
அவரால் நிலையான முன்னேற்றம் கிடைக்கும். 692

பெருங்குற்றம் வாராதபடி காத்துக் கொள்க;
அரசர் ஐயப்படின் தெளிவித்தல் முடியாது. 693

காதோடு ஓதுதலையும் பார்த்துச் சிரித்தலையும்
பெரியவர்முன் வைத்துக் கொள்ளாதே. 694

எந்தச் செய்தியையும் ஒட்டுக் கேளாதே;
சொல்லும்படி கேளாதே; சொன்னாற் கேள். 695

மன்னனின் குறிப்பறிந்து காலம் பார்த்து
வேண்டியவற்றை விரும்புமாறு சொல்லுக. 696

வேண்டியதைக் கேளாவிடினும் சொல்லுக;
வேண்டாததைக் கேட்டாலும் சொல்லற்க. 697

இளையவன் உறவினன் என அவமதியாமல்
அரசனது அதிகாரத்தை மதித்து ஒழுகுக. 698

மதிக்கப்பட்டேன் என்று மதியாதன செய்யார்
பிறழாத அறிவினை யுடையவர். 699

பழக்கம் என்று பண்பில்லாதபடி நடந்தால்
அந்த நட்புரிமை கேடு விளைக்கும். 700





## மன்னரைச் சேர்ந்தொழுகல்

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 691

மன்னர் விழைப விழையாமை மன்னரால்
மன்னிய ஆக்கந் தரும். 692

போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது. 693

செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து. 694

எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை. 695

குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 696

வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல். 697

இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும். 698

கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். 699

பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும். 700

## குறிப்பறிதல்

கூறாமலே முகம்பார்த்துக் குறிப்பு அறிபவன்
உலகத்துக்கு என்றும் ஓர் அணியாவான். 701

தெளிவாக உள்ளோட்டத்தை உணர்பவனைத்
தெய்வத்துக்கு நிகராக மதிக்க. 702

முகச்சாடையினால் உள்ளத்தை உணர்பவரை
எது கொடுத்தும் அவையில் அமர்த்திக்கொள்க. 703

குறிப்பைக் கூறாமலே அறிய வல்லவர்க்கும்
அறியாதவர்க்கும் உடம்பளவில் ஒற்றுமை. 704

முகங்கண்டு உள்ளம் காணவில்லை யாயின்
கண் என்ற உறுப்பின் பயன் என்ன? 705

முன்னுள்ள பொருளைக் கண்ணாடி காட்டும்;
உள் மிக்க உணர்ச்சியை முகம் காட்டும். 706

மகிழ்வையும் வெறுப்பையும் முகம் முந்திக்காட்டும்;
முகம்போல் அறியுந்திறம் பிறிதிற்கு இல்லை. 707

நிகழ்வதை உள்ளத்தால் உணர்வார்க்கு முன்னே
முகம் பார்த்து நின்றால் போதுமே. 708

பகையா நட்பா என்பதைக் கண் சொல்லும்;
கண்ணின் கூறு தெரிந்தவர்கட்கு. 709

கூரிய அறிவுடையோம் என்பவர்க்கு
அளவுகோலாவது பிறர்கண்ணே; வேறில்லை. 710





## குறிப்பறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி. 701

ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். 702

குறப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல். 703

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போ ரனையரால் வேறு. 704

குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண். 705

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 706

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும். 707

முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின். 708

பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். 709

நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற. 710

## அவை அறிதல்

சொற்பொழிவின் விளைவை அறிந்த நல்லவர்
கூட்டத்தின் நிலையறிந்து ஆராய்ந்து பேசுக. 711

சொல்லின் நடையறிந்தவர் இடையிடையே
கூட்டத்தின் போக்கை விளங்கிச் சொல்லுக. 712

கூட்டம் அறியாது பேச முற்படுபவர்
பேச்சு வகையறியார்; வல்லமையும் இல்லார். 713

அறிவுக் குழுவில் நல்லறிஞனாய் விளங்குக;
பேதைக்குழுவில் வெள்ளைபோல் நடக்க. 714

அறிஞர் குழுவில் முந்திக்கொண்டு எதனையும்
சொல்லாத அடக்கம் மிகநல்ல குணம். 715

நிரம்பக் கற்றார் முன்னே குற்றப்படுதல்
வழியிடை வழுக்கி விழுந்தது போலும். 716

தெளிவாகச் சொற்பொருள் அறிவார் அவையில்
கற்றவர்தம் கல்வி மேம்பாடு அடையும். 717

உணரும் தன்மை உடையார்முன் கூறுவது
வளரும் பாத்தியில் நீர்பாய்ச்சியது போலும். 718

நற்கூட்டத்தில் நன்கு பேச வல்லவர்
இழிகூட்டத்தில் மறந்தும் போய்ப் பேசற்க. 719

தன்னிலைக்குத் தகாதவர் கூட்டத்தில் பேசுவது
சாக்கடையிற் கொட்டிய அமிழ்தம் போலும். 720





## அவை அறிதல்

அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 711

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். 712

அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல். 713

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். 714

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 715

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு. 716

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து. 717

உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. 718

புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார். 719

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தார்
அல்லார்முன் கோட்டி கொளல். 720

## அவையஞ்சாமை

சொற்பொழிவை அறிந்தவர் பாகுபாடு தெரிந்து
இன்னாதவற்றைத் தவறியும் சொல்லார். 721

கற்றவருள் கற்றார் எனப்படுவார் யார்?
கற்றவர்முன் எடுத்துச் சொல்ல வல்லவரே. 722

போரில் சாக அஞ்சாதவர் மிகப்பலர்;
அவையில் பேச அஞ்சாதவரோ மிகச் சிலர். 723

கற்றவர்முன் கற்றதை எடுத்துச் சொல்லுக;
மிகக் கற்றவரிடம் மிகுதியைத் தெரிந்துகொள்க. 724

அவைக்கண் அஞ்சாது மறுமொழி சொல்ல
முறையாகத் தருக்கநூல் அறிந்து கற்க. 725

வீரர் அல்லார்க்கு வாளோடு என்ன உறவு?
மேடைஅஞ்சுவார்க்கு நூலோடு என்ன உறவு? 726

மேடையில் அஞ்சுபவன் கற்ற நூற்படிப்பு
போரில் பேடி பிடித்த கூரியவாள் போலும். 727

நல்லவையில் எடுத்துச் சொல்ல இயலாதவர்
பல படித்தும் பயனில்லை. 728

படித்தறிந்தும் நல்லவையில் பேச அஞ்சுபவர்
படியாதவரினும் கீழ் என்பார்கள். 729

மேடைக்கு அஞ்சிச் சொல்ல மாட்டாதவர்
வாழ்ந்தாலும் மாண்டவருக்கு ஒப்பாவர். 730





## அவை அஞ்சாமை

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 721

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 722

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். 723

கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல். 724

ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு. 725

வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு. 726

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். 727

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார். 728

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார். 729

உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். 730

## நாடு

குறையாத விளைச்சலும் நடுநிலைமை யாளரும்
சோர்விலாத வணிகரும் உடையது நாடு. 731

பொருட் பெருக்கத்தால் விரும்பத் தக்கதும்
கேடின்றி மிக விளைவதும் நாடு. 732

வரும் சுமையெல்லாம் தாங்கி அரசனுக்கு
வரியெல்லாம் கொடுப்பதுவே நாடு. 733

தீராப்பசியும் தீரர்நோயும் தீராப்பகையும்
இல்லாது நடப்பதுவே நாடு. 734

பலகட்சி, உட்பகை, அரசினை ஆட்டும்
காலிக் கூட்டம் இல்லாததே நாடு. 735

கேடறியாது கெட்டாலும் வளங்குறையாது
என்ற நாடே தலையான நாடு. 736

அகழியும் வாய்ப்பான மலையும் அருவியும்
வன்மதிலும் நாட்டின் உறுப்புக்கள். 737

நோயின்மை செல்வம் விளைச்சல் இன்பம் காவல்
ஐந்தும் நாட்டிற்கு அணி என்பர். 738

தன்னிறைவுடைய வளநாடே உரிமை நாடு;
பிறநாட்டை எதிர் நோக்கும் நாடு நாடன்று. 739

மேலைச் சிறப்பெல்லாம் இருந்தும் பயனில்லை
நல்லாட்சி இல்லாத நாடு. 740





## நாடு

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. 731

பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு. 732

பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறையொருங்கு நேர்வது நாடு. 733

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு. 734

பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு. 735

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை. 736

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு. 737

பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. 738

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. 739

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. 740

## அரண்

போர்மேற் செல்வார்க்கும் மதில்வேண்டும்;
அஞ்சித் தற்காப்பவர்க்கும் அது வேண்டும். 741

அகழியும் வெட்டவெளியும் மலையும்
செறிந்த காடும் சேர்ந்தது அரணாகும். 742

உயரம் அகலம் உறுதி அருமை நான்கும்
அமைந்ததே அரண் என்று நூல்கூறும். 743

காக்கும் அளவு சிறிதாய் இடம்பெரிதாய்ப்
பகைவரின் எழுச்சியை மழுக்குவதே அரண். 744

பிடிப்பதற்கு அரியதாய் உணவு நிறைந்ததாய்
உள்ளிருப்பவர் செயலுக்கு எளியதே அரண். 745

எல்லாப்பொருளும், இடத்துக்குக் கொண்டுபோய்
உதவும் நல்லாளும் உடையதே அரண். 746

வளைந்தோ திடீரெனத் தாக்கியோ வஞ்சித்தோ
பிடிக்க முடியாதது அரண். 747

வலுவாகச் சூழ்ந்து வளைத்தவரையும்
நிலைதளராது நின்று வெல்வதே அரண். 748

போர்முனையில் பகைவர் ஓடுமாறு போர்வினையில்
பெருமிதச் சிறப்புடையதே அரண். 749

அரண் எவ்வாற்றல் உடையதாக இருந்தாலும்
பேராற்றல் இல்லாதார்க்குப் பயன் இல்லை. 750





## *அரண்*

ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். 741

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண். 742

உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல். 743

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண். 744

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீரது அரண். 745

எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லாள் உடையது அரண். 746

முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண். 747

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வது அரண். 748

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்டது அரண். 749

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண். 750

## பொருள் செயல்வகை

மதிப்பு இல்லாதவரையும் மதிப்பு உடையராகச்
செய்யும் செல்வமே சிறந்த செல்வம். 751

செல்வம் இல்லாதவரை எல்லோரும் இகழ்வர்;
உடையவரை எல்லோரும் சிறப்புச் செய்வர். 752

செல்வம் என்னும் அழியா ஒளி
எவ்விடமும் சென்று இருளை ஓட்டும். 753

நெறியோடு குற்றமின்றி ஈட்டிய பொருள்
அறமும் தரும்; இன்பமும் தரும். 754

அருளும் அன்பும் பொருந்தாத செல்வத்தைத்
தொடாது போகவிடுக. 755

வரியும் சுங்கமும் பகைவரின் திறையும்
அரசனுக்கு வருவாய்ப் பொருளாம். 756

அன்புத் தாய் பெற்ற அருட்குழந்தை
செல்வத் தாதியால் வளரும். 757

கையிற் பொருள்வைத்துக் காரியம் செய்தல் மலையேறி
யானைப்போரைப் பார்ப்பது போலாம். 758

ஈட்டுக பொருளை; எதிரியின் இறுமாப்பை
அறுக்கும் கருவி அதுபோல் வேறில்லை. 759

சிறந்த பொருளைத் திரளாக ஈட்டியவர்க்கு
அறமும் இன்பமும் எளிதிற் கிடைக்கும். 760





## பொருள் செயல்வகை

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள். 751

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. 752

பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 754

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். 755

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு. 757

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று
உண்டாகச் செய்வான் வினை. 758

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல். 759

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. 760

## படைமாட்சி

போருடல் பெற்றுப் புண்ணுக்கு அஞ்சாத
வெற்றிப்படை வேந்தன் செல்வத்திற் சிறந்தது. 761

கெடுதலான இடத்து அஞ்சாத உறுதி
தூரத்தில் பழம்படைக்கே உண்டு. 762

எலிக்கூட்டம் கடல்போல் கத்தினால் என்ன?
ஒருபாம்பு சீறிய அளவில் ஓடிப்போமே. 763

அழியாதும் வஞ்சனைக்கு ஆளாகாதும்
வழிவழி வீரமுடையதுவே படை. 764

எமனே சினந்து வந்தாலும் ஒன்றுகூடி
எதிர்க்கும் வீரமுடையதுவே படை. 765

வீரம் மானம் சிறந்தநடை தெளிவு
என்ற நான்கும் படைப்புக்கு வேண்டியவை. 766

வந்த போரைத் தடுக்கும் முறையறிந்து
முற்படையைச் செலுத்துவதே சேனையாம். 767

அழித்தலும் பொறுத்தலும் இல்லை எனினும்
சேனை தோற்றத்தால் சிறப்பு அடையும். 768

இழிவும் நீங்காத மனக்கசப்பும் வறுமையும்
இல்லை யென்றால் படைவெல்லும். 769

படையில் வீரர் பலர் இருந்தாலும்
நல்ல தலைவர் இல்லையெனின் பயனில்லை. 770





## படைமாட்சி

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை. 761

உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது. 762

ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும். 763

அழிவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. 764

கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 765

மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு. 766

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை யறிந்து. 767

அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும். 768

சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை. 769

நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல். 770

## படைச் செருக்கு

எதிரிகளே! என் தலைவன்முன் நில்லாதீர்!
அவன்முன் நின்று கல்லானவர் பலர். 771

காட்டு முயலைக் கொன்ற அம்பைக் காட்டினும்
யானைக்குறி தவறியவேலை ஏந்தல் சிறப்பு. 772

பகைவரைக் கொல்லுதல் வீரம்; அவர்க்குத்
துன்பம்வரின் உதவுதல் வீரத்தின் சிகரம். 773

கைவேலை யானைமேல் வீசிவரும் வீரன்
நெஞ்சில் தைத்தவேலைப் பறித்துச் சிரிப்பான். 774

பார்த்தகண் பகைவேலுக்கு மூடி இமைப்பினும்
வீரர் புறங்காட்டியதற்குச் சமமாம். 775

வீரப்புண் படாத நாட்களை யெல்லாம்
குற்றநாட்களாகக் கொள்வான் வீரன். 776

புகழை மதித்து உயிரை மதியாத வீரர்
கட்டிய வீரக்கழலே கண்ணுக்கு அழகியது. 777

போர்வரின் உயிருக்கு அஞ்சாத வீரர்
அரசன் அடக்கினும் வீரவுணர்ச்சி குறையார். 778

வஞ்சினம் தவறாமல் உயிர் கொடுத்தவரை வெற்றி
தவறினார் என்று தண்டிப்பார் உண்டோ? 779

காத்தவர் கண்கலங்கும்படி சாகப் பெற்றால்
அச்சாவு வேண்டியாயினும் பெறும் சிறப்பினது. 780





## படைச் செருக்கு

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர். 771

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு. 773

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 775

விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து. 776

சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777

உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர். 778

இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர். 779

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து. 780

## நட்பு

நட்புப்போல் செய்தற்கு அரியதும் இல்லை;
அதுபோல் காரியத்துக்குத் துணையும்வேறில்லை. 781

நல்லவர் நட்பு வளர்பிறை போன்றது;
பேதையர் நட்புத் தேய்பிறை போன்றது. 782

பழகப் பழகப் பண்புடையவர் நட்பு
படிக்கப் படிக்க நூலின்பம் போலும். 783

நட்புச் செய்தல் அரட்டை அடித்தற்கன்று;
பிழை செய்யும்போது முன்வந்து இடித்தற்காம். 784

நட்புக்குப் பலநாட் பழக்கம் வேண்டாம்;
ஒத்த மனப்பான்மையே உறவு தரும். 785

முகம் இனிக்கப் பழகுவது நட்பாகாது;
மனம் இனிக்கப் பழகுவதே நட்பு. 786

தீமைகளை நீக்கி நல்வழிப் படுத்தித்
துன்பத்தில் தொடர்பு கொள்வதே நட்பு. 787

உடைநெகிழின் உடனே உதவும் கைபோல
நண்பன் துயரை முந்திக்களைவதே நட்பு. 788

நட்பின் உயர் நிலையாது? வேறு படாமல்
முடிந்தவரை நண்பனைத் தாங்கி நிற்றல். 789

இவர் இன்னார், யான் இன்னவன் என்று
பிரித்துக் கூறினும் நட்பு பெருமை இழக்கும். 790





## நட்பு

செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. 781

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 782

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 783

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு. 784

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். 785

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு. 786

அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்க்ண்
அல்லல் உழப்பதாம் நட்பு. 787

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. 789

இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு. 790

## நட்பாராய்தல்

ஆராயாது நட்பதுபோல் கேடில்லை; ஏன்?
நட்புச் செய்தபின் என்றும் விடுதலை இல்லை. 791

பலமுறை ஆராய்ந்து கொள்ளாத நட்பு
இறுதியில் சாகும் துயரத்தைத் தரும். 792

குணம் குடிப்பிறப்பு குற்றம் கூட்டாளி
எல்லாம் அறிந்து நட்புக் கொள்க. 793

நற்குடியிற் பிறந்து பழிக்கு அஞ்சுபவனை
எது கொடுத்தும் நட்புக் கொள்வாயாக. 794

அழும்படி சொல்லி இடித்துரைக்கும் ஆற்றல்
உடையவர் நட்பை உணர்ந்து கொள்க. 795

கேடுகாலத்தும் ஒரு நன்மை உண்டு; அன்று
நண்பர் யார் என்று அளந்து கொள்ளலாம். 796

ஒருவர்க்கு வருவாய் என்பது யாது?
அறிவிலார் நட்பை அகற்றிக் கொள்ளுதல். 797

மனம் சுருங்கும் எண்ணங்களை எண்ணாதே;
துன்பத்தில் கைவிடுவார் நட்பைக்கொள்ளாதே. 798

துன்பக் காலத்துக் கைவிட்டவர் நட்பினை
ஈமத்தீயில் நினைப்பினும் நெஞ்சம் எரியும். 799

குற்றமிலார் நட்பைக் கொள்ளுக; எது கொடுத்தாலும்
ஒவ்வாதார் நட்பை உதறித் தள்ளுக. 800





## நட்பாராய்தல்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. 791

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும். 792

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு. 793

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு. 794

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல். 795

கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். 796

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். 797

உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு. 798

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும். 799

மருவுக மாசற்றார் கேண்மைஒன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. 800

## பழமை (நல்ல நட்பு)

நல்ல நட்பு என்பது யாது? எவ்வகையாலும்
உறவை முரித்துக் கொள்ளாத நட்பு. 801

நட்புக்கு இலக்கணம் உரிமையோடு செய்தல்;
அச்செயலுக்கு மகிழ்தல் உயர்ந்தோர் கடமை. 802

உரிமையோடு செய்ததை உடன்படா விட்டால்
பழகிய பழக்கத்தின் பயன் என்னவோ? 803

உரிமையோடு நண்பர் கேளாது செய்தால்
அங்ஙனம் செய்வதை ஆவலோடு எதிர்பார்ப்பர். 804

வருந்தும் செயல்களை நண்பர் செய்தால்
அறியாமையோடு உரிமையும் என உணர்க. 805

துன்பத்தும் நெடுநாள் நண்பர் தொடர்பினைப்
பண்பில் உயர்ந்தவர் விட்டுவிடார். 806

அன்பு நெறியிலே பழகியவர் நண்பன்
தீமை செய்தாலும் அன்பை விடார். 807

நண்பரின் பிழைக்குக் காதுகொடாதவர்க்கு
நண்பர் பிழைசெய்யும் நாள் நன்னாளாகும். 808

கெடாமல் வந்த நட்பின் தொடர்பை
விடாமல் போற்றுவாரை உலகம் விரும்பும். 809

பழகியவர்பால் பண்பு மாறாதவரைப்
பகைவரும் விரும்புவர். 810





## *பழைமை*

பழைமை எனப்படுவது யாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. 801

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன். 802

பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை. 803

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின். 804

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 805

எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு. 806

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். 807

கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின். 808

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு. 809

விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார். 810

## தீ நட்பு

தீயவர் ஆர்வம் காட்டினாலும் அவர் நட்பு
வளர்வதைவிடக் குறைவது நல்லது. 811

இடைக்குமானால் பழகி இல்லையானால் கைவிடும்
தீயவர் நட்பு இருந்தாலென்? போனால் என்? 812

வரும்படி பார்க்கும் நண்பரும் பரத்தையரும்
திருடரும் தம்முள் சமம். 813

போரில் கால்வாங்கும் குதிரை போன்றவரின்
உறவைக் காட்டிலும் தனிமை நல்லது. 814

உதவி செய்தும் பயனில்லாச் சின்னவர் நட்பு
இருப்பதினும் இல்லாமை நல்லது. 815

பேதையின் பெருநட்பைவிட அறிஞரின் பகை
கோடிமடங்கு நல்லது. 816

முகத்தளவில் மலரும் நட்பைக் காட்டிலும்
பகை பத்துக்கோடி நல்லது. 817

முடிக்கக் கூடிய காரியத்தைச் செய்யாதவரின்
நட்பினைச் சொல்லாதே நழுவ விடுக. 818

செயல் வேறு சொல் வேறு என்பவரின்
நட்பு கனவிலும் நன்மை தராது. 819

வீட்டில் புகழ்ந்து வெளியில் தூற்றுபவரின்
தொடர்பினைச் சிறிதும் வரவொட்டாதே. 820





## தீ நட்பு

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது. 811

உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என். 812

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். 813

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை. 814

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று. 815

பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும். 816

நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும். 817

ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். 818

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு. 820

## கூடா நட்பு

உள்ளம் பொருந்தாது ஒழுகுபவர் நட்பு
வாய்ப்பு வரின் அடிக்கும் பட்டறையாம். 821

உறவுபோல நடிக்கும் வஞ்சகரின் நட்பு
பரத்தை மனம்போல மாறுபடும். 822

நல்ல பல நூல்களைக் கற்றிருந்தாலும்
வஞ்சகர்க்கு நல்ல மனம் வாராது. 823

முகத்திலே புன்சிரிப்புக் காட்டி அகத்திலே
கொடிய வஞ்சகரை அஞ்ச வேண்டும். 824

மனத்தில் ஒட்டாதவரை எந்த அளவிலும்
சொல்லினால் நம்புதல் கூடாது. 825

நண்பர் போல நல்லன கூறினாலும்
தீயவர் கருத்து உடனே தெரிந்து விடும். 826

பகைவரின் சொற்பணிவு கண்டு ஏமாறாதே;
வில்லின் வளைவு தீமைக்கு அறிகுறி. 827

பகைவர் தொழுத கைக்குள் படையிருக்கும்;
அவர் அழுத கண்ணீரும் படையாகும். 828

மிகவும் பழகி உள்ளே இகழ்பவருடன்
நீயும் மகிழப் பேசி நட்பைக் குறைக்க. 829

பகைவன் நண்பனாக வரும் சமயம்
முகத்தால் ஏற்று அகத்தால் நட்பை விடுக. 830





## கூடா நட்பு

சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும். 824

மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று. 825

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும். 826

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று 829

பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு
அகநட்பு ஒரீஇ விடல். 830

## பேதைமை

பேதைமை என்ற நிலையின் இயல்பு யாது?
தீமையைக் கொண்டு நன்மையை விடுதல். 831

அறியாமையுள் எல்லாம் பெரிய அறியாமை
வேண்டாத பொருள்மேல் விருப்பம் கொள்வது. 832

வெட்கமின்மை நாட்டமின்மை உறுதியின்மை
பேணுதலின்மை பேதையின் இயல்புகள். 833

கற்றும் உணர்ந்தும் கற்பித்தும் தான்மட்டும்
அடங்காத அறிவிலிபோல் அறிவிலி இல்லை. 834

எழுபிறப்பிலும் தான் தங்கும் நரகத்தினை
ஒரு பிறப்பிலேயே பேதை தேடிக் கொள்வான். 835

செயலறியாத பேதை செய்யப் புகுந்தால்
பொய்சொல்வான்; கைவிலங்கும் கொள்வான். 836

பேதை உரிமையால் பெருஞ்செல்வம் பெற்றால்
அயலவர் கொழுப்பர்; உறவினர் வாடுவர். 837

அறிவிலிக்குப் பொருளும் கிடைக்குமாயின்
பைத்தியம் கட்குடித்த நிலை போலாகும். 838

பேதையின் உறவு பெரிதும் இனியது;
பிரியுங்கால் யாதும் வருத்தம் இல்லை. 839

அறிஞரின் அவைக்கு அறிவிலி போதல்
கழுவாதகாலைத் தவப்பள்ளியில் வைப்பதுபோல். 840





## பேதைமை

பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல். 831

பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். 832

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 833

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையின் பேதையார் இல். 834

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு. 835

பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை. 837

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின். 838

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல். 839

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

## புல்லறிவாண்மை

அறிவு வறுமையே வறுமை; பிறவற்றை
வறுமையாக உலகம் கருதாது. 841

அறிவிலான் மனம்உவந்து ஈவானாயின்
கொள்பவன் நல்வினையே காரணம். 842

அறிவிலி தானே தேடிக்கொள்ளும் துயரைப்
பகைவரும் அவனுக்குச் செய்ய இயலாது. 843

அறிவின்மை என்பது யாது? எனக்கு
எல்லாம் தெரியும் என்னும் இறுமாப்பு. 844

படியாதவற்றை மேற்கொண்டு நடப்பின்
நன்கு படித்ததிலும் உலகம் ஐயம்கொள்ளும். 845

உன்பால் குற்றத்தை ஒழிக்காத போது
ஆடைகட்டுதல் அறிவாமோ? 846

மறைவான செய்தியைச் சொல்லிவிடும் அறிவிலி
தனக்குத் தானே கேடாவான். 847

சொன்னாலும் செய்யான் தன்னாலும் தெளியான்
இவன் சாகும்வரை பிறர்க்கு நோயாவான். 848

அறிவிலி தான் கண்டதையே கண்டவன்;
அவனை அறிவுறுத்துபவன் அறியாதவன். 849

உலகம் கூறும் உண்மையை மறுப்பவன்
காணும் பேயாகக் கருதப் படுவான். 850





## புல்லறிவாண்மை

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையாது உலகு. 841

அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம். 842

அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 843

வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு. 844

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும். 845

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி. 846

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய். 848

காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு. 849

உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். 850

## இகல் (மாறுபாடு)

மாறுபாடு என்னும் குணம் உயிர்களுக்குள்
பகையுணர்ச்சியைப் பரப்பும் நோயாகும். 851

பகைமை கருதித் தகாதன செய்தாலும்
மாறுபாடு கருதிக் கொடுமை செய்யற்க. 852

மாறுபாடு என்னும் தொழுநோய் நீங்கினால்
அழிவில்லாத அறிவுவிளக்கம் உண்டாகும். 853

மாறுபாடு என்னும் பெருந்துன்பம் ஒழிந்தால்
சிறந்த இன்பம் விளையும். 854

மாறுபாட்டுக்கு ஒதுங்கிப் போய்விடுவாரை
வம்புக்குத் தூண்ட யாரால் இயலும்? 855

வீம்பு மிகுதியை விரும்புபவன் வாழ்வு
சிதைதலும் அழிதலும் நாளாகாது. 856

மாறுபடுதலை விரும்பும் கொடிய அறிவினர்
மேன்மை தரும் உண்மைப் பொருளை அறியார். 857

மாறுபாட்டுக்கு ஒதுங்குதல் முன்னேற்றமாம்;
ஒதுங்காது நிமிர்ந்தால் கேடு வளரும். 858

தனக்கு நலம்வரும்போது வேற்றுமை பாரான்;
பிறனைக்கெடுக்க வேறுபாட்டைப் பெருக்குவான். 859

எல்லாத் துன்பமும் வேற்றுமையால் வரும்;
நலமான உணர்ச்சி நல்லுறவால் உண்டாம். 860





## இகல்

இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். 851

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 852

இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும். 853

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 854

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர். 855

இகலின் மிகலினிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. 856

மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர். 857

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாம் கேடு. 858

இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. 859

இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு. 860

## பகைமாட்சி

வலியவரோடு முரணுதலை விடுக; தன்னைக்
காவாத எளியவரைப் பகைக்க. 861

அன்பும் பெருந்துணையும் வலியும் இல்லாதவன்
பகைவன் வலியை எங்ஙனம் தாங்குவான்? 862

துணிவும் அறிவும் ஒழுங்கும் கொடையும்
இல்லாதவன் பகைவர்க்கு எளியவன். 863

பொறுமையும் உறுதியும் சிறிதும் இல்லாதவன்
என்றும் யார்க்கும் எளியவன். 864

வழியும் பொருத்தமும் பழியும் பாராதவன்
பண்பும் இல்லாதவன் பகைவர்க்கு இனியவன். 865

புரியாத சினமும் அளவிலாத காமமும்
உடையவனது நிலையைப் பயன்படுத்திக் கொள்க. 866

பக்கத்திருந்தும் புரியாது செய்பவனது
எதிர்ப்பை யாது கொடுத்தும் கொள்க. 867

குணமின்றிக் குற்றம்பல கொண்ட அரசன்
துணையற்றவன்; பகைவர்க்கு வாய்ப்பானவன். 868

அறிவற்ற துணைவற்ற பகைவர் கிடைப்பின்
பகைப்பவர்க்கு என்றும் நலம் உண்டு. 869

கல்லாதவனை, சினப்பவனை, சிறிய முயற்சியால்
பெரும்பொருளீட்டாதவனை அதிகாரம் அடையா. 870





## பகை மாட்சி

வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை. 861

அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு. 862

அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு. 863

நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. 864

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது. 865

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 866

கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. 867

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனனிலனாம் ஏமாப்பு உடைத்து. 868

செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி. 870

## பகைத்திறம் தெரிதல்

பகைக்கும் தீய குணத்தை யாரும்
விளையாட்டாகவும் விரும்புதல் கூடாது. 871

வில்லுடைய வீரரைப் பகைத்துக் கொண்டாலும்
சொல்லுடைய புலவரைப் பகைக்காதே. 872

தனியனாக இருந்து பலரைப் பகைப்பவன்
பித்தனைக் காட்டிலும் இரங்கத்தக்கவன். 873

பகைவனையும் நண்பனாகக்கருதும் உயர்ந்தவனது
பெருந்தன்மையால் உலகம் வாழ்கின்றது. 874

தனக்கோ துணையில்லை; பகையோ இரண்டு;
ஒரு பகையை நல்ல துணையாக்கிக் கொள்க. 875

தெளியினும் தெளியாவிடினும் துன்பநிலையில்
நம்பி விடாதே; பகைத்து விடாதே. 876

துன்பத்தை உணரா நண்பர்க்குச் சொல்லாதே;
தன்குறைபாட்டைப் பகைவர் முன் காட்டாதே. 877

வகையாகத் தன்வலி பெருக்கிக் கொண்டால்
மாற்றாரின் ஆணவம் தானே மறையும். 878

முள்ளுடைய மரத்தை முளையிலே அழிக்க;
முதிர்ந்துவிடின் வெட்டுவார் கை புண்படும். 879

பகைப்பவரின் இறுமாப்பை அழிக்காதவர்
பகைவர் மூச்சுவிட்டாற் போதும், அழிவர். 880





## *பகைத்திறம் தெரிதல்*

பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று. 871

வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. 872

ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. 874

தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று. 875

தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல். 876

நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 877

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு. 878

இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து. 879

உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

## உட்பகை

குளிர்ந்த நீரும் தீமை எனின் விரும்பத்தகா;
உறவினர் குணங்களும் கேடுதரின் பிடிக்கா. 881

வாள்போல் கொடிய பகைக்கு அஞ்சவேண்டாம்;
உறவுபோல் நடிக்கும் உட்பகைக்கு அஞ்சுக. 882

உட்பகையிலிருந்து தன்னைக் காத்துக்கொள்க;
தளருங்கால் மண்வெட்டி போலச் சாய்ந்துவிடும். 883

உள்ளம் ஒட்டாத உட்பகை இருந்தால்
சுற்றம் ஒட்டாதபடி பல துன்பம் தரும். 884

உறவு முறையில் பகை உண்டாகின்
சாகும்படியான பல துன்பம் தரும். 885

கூடஇருப்பவர்பால் கூடாமை ஏற்படின்
ஒருநாளும் அழிவிலிருந்து தப்ப முடியாது. 886

தவலையும் மூடியும்போலச் சேர்ந்திருந்தாலும்
உட்பகை உள்ள குடியினர் மனம் ஒன்றுபடார். 887

உட்பகை உள்ளகுடி மெல்ல வலிகுறைந்து
அரம் அராவிய இரும்புபோல் தேயும். 888

எள்ளின் பிளவுபோலச் சிறிதாக இருந்தாலும்
உட்பகையால் கேடு உண்டு. 889

மனவொற்றுமை இல்லாதவரோடு வாழ்தல்
பெட்டியில் பாம்புடன் வாழ்வதைப் போலும். 890





## உட்பகை

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின். 881

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவுந் தரும். 884

உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவுந் தரும். 885

ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது. 886

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி. 888

எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று. 890

## பெரியாரைப் பிழையாமை

எதுவும் செயவல்லவரின் ஆற்றலைப் பழிக்காதே;
அதுவே தன்னைக்காக்கும் தலையாய நெறி. 891

பெரிய ஆற்றலுடையாரை மதியாது நடந்தால்
தவிர்க்க முடியாத துன்பம் வரும். 892

தொலைக்க நினைப்பின் தொலைக்க வல்லாரிடம்
தொலைய வேண்டின் உன்மனம்போல் நடக்க. 893

வலியாரை மெலியார் வம்புக்கு இழுத்தல்
யமனைக் கையால் அழைப்பதுபோலாகும். 894

வலிமிக்க வேந்தனை எதிர்த்துக்கொண்டவர்
எங்கெங்கு போனாலும் உய்ய முடியுமா? 895

தவறி நெருப்பில் விழுந்தாலும் தப்பிக்கலாம்;
பெரியவர்க்குத் தவறு செய்தால் பிழைப்பில்லை. 896

எல்லாத் தகுதியும் நிறைந்தவர் சினந்தால்
ஏற்றமான வாழ்வும் செல்வமும் என்னாகும்? 897

குன்றுபோல் வலியுடையார் அழிக்க நினைப்பின்
குடிதழைத்து நின்றவரும் வழியின்றி மறைவர். 898

மேலான கொள்கையர் சீறினால் இடைநடுவே
வேந்தனும் அரசு இழப்பான். 899

சிறப்பு மிக்க பெரியவர் சினந்தால் ஆற்றல்
மிக்கவர் துணையிருப்பினும் மீளமுடியாது. 900





## *பெரியாரைப் பிழையாமை*

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாம் தலை. 891

பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும். 892

கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு. 893

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல். 894

யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். 895

எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். 896

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின். 897

குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 898

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். 900

## பெண்வழிச் சேறல்

பெண்வழி நடப்பவர் பெரும்பயன் அடையார்;
காரியம் விரும்புபவர் அங்ஙனம் நடவார். 901

காரியம் பேணாமல் மனைவிவழி நடப்பவனது
மேன்மை பெரிய வெட்கத்துக்கு உரியதாகும். 902

மனைவிக்குப் பணிந்து நடக்கும் போக்கு
என்றும் அறிஞரிடை வெட்கம் தரும். 903

மனைவிக்கு அஞ்சுபவன் மறுமை இழந்தவன்;
அவன் காரியத்திறம் சிறப்பு அடையாது. 904

மனைவிக்கு அஞ்சுபவன் நல்லவர்க்கு
நல்லது செய்ய என்றும் அஞ்சுவான். 905

மனைவியின் அழகிய தோளுக்கு அடங்கியவர்
தேவர்போல வாழ்ந்தாலும் சிறப்பில்லை. 906

மனைவி கட்டளைப்படி நடக்கும் ஆடவனைவிட
நாணமுண்டைய பெண்ணே மதிக்கத்தக்கவள். 907

நல்ல நெற்றியுடையவள் சொற்படி நடப்பவன்
நண்பர்க்கு உதவான்; நல்லதும் செய்யான். 908

மனைவி ஏவக் காரியம் செய்வாரிடத்து
அறமும் பொருளும் இன்பமும் இரா. 909

சிந்தனை செறிந்த மனத்திட்பம் உடையார்பால்
மனைவி சொற்படி நடக்கும் மடமை இராது. 910





## *பெண்வழிச் சேறல்*

மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது. 901

பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும். 903

மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று. 904

இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். 905

இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர். 906

பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்
பெண்ணே பெருமை உடைத்து. 907

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர். 908

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல். 909

எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910

## வரைவின் மகளிர் (பரத்தை)

அன்பின்றிப் பொருளை விரும்பும் பரத்தையரின்
நயமான சொல் துன்பம் தரும். 911

பயனளவு பார்த்து இனிது பேசும் பரத்தையரின்
வஞ்சனையை அறிந்து ஒதுங்குக. 912

பொருள் விரும்பும் பரத்தையரின் பொய்த்தழுவல்
இருட்டறையில் ஒரு பிணம் தழுவியதுபோலும். 913

அருளை ஆராயும் அறிவினை யுடையவர்
பொருளை ஆராயும் பரத்தையைத் தழுவார். 914

இயற்கையறிவோடு நூலறிவும் உடையவர்
பொது இன்பப் பெண்டிரைத் தழுவார். 915

அழகுத் திமிரால் சிறுநலம் பரப்புவாரது
தோள்களை நன்மை நாடுபவர் தொடார். 916

பலவற்றைக் கருதிக் கூடும் பரத்தையரின்
தோள்களை நெஞ்சுறுதியற்றவரே தீண்டுவர். 917

மாயம்வல்ல பரத்தையரின் தழுவல்
சிந்தனையற்றவர்க்குத் தெய்வப்பேறு ஆகும். 918

மிக இழிந்தவர் கிடக்கும் நரகம் எது?
ஒருவரம்பில்லாத பரத்தையரின் தோளாகும். 919

திருமகள் கைவிட்டவர்களுக்கு உறவாவன
பரத்தையும் கள்ளும் சூதாட்டமும் ஆம். 920





## *வரைவின் மகளிர்*

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும். 911

பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல். 912

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. 913

பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர். 914

பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர். 915

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். 916

நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். 917

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. 918

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

## கள்ளுண்ணாமை

என்றும் கள்ளாசை கொண்டு திரிபவர்
வெட்கப்படார்; மதிப்புக்குறைவர். 921

கள் குடியற்க; பெரியோரிடம் மதிப்புப் பெற
விரும்பாதார் வேண்டுமானால் குடிக்கட்டும். 922

கள்ளாட்டம் தாய்க்கும் அருவருப்பைத் தரும்;
பெரியவர்க்கு என்ன ஆகும்? 923

கள்குடிக்கும் தகாத பெருங்குற்றம் உடையவரை
நாண் என்னும் நங்கை விட்டுப் போவாள். 924

விலை கொடுத்தும் மெய்ம்மறதியை வாங்குதல்
வாழத் தெரியாமையாகும். 925

துஞ்சினவர் என்பவர் செத்தவரே;
கள்ளுண்பவர் என்பவர் நஞ்சுண்பவரே. 926

கள்ளை மூடிக்குடித்துக் கண் தடுமாறுபவரின்
உள்ளத்தை அறிந்துகொண்டு ஊர்சிரிக்கும். 927

குடியை மறைக்கலாம் என்பதை விட்டொழி;
மறைத்ததைக் குடி உடனே வெளியாக்கும். 928

குடிகாரனைச் சொல்லித் திருத்துதல் குளத்தில்
விழுந்தவனை விளக்கால் தேடுதல் ஒக்கும். 929

தான் குடியா நிலையில் குடித்தவனைக் காணின்
தன் குடிமயக்கத்தை ஒருவன் உணரமாட்டானா? 930





## *கள்ளுண்ணாமை*

உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார். 921

உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார். 922

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. 923

நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. 924

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். 925

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். 926

உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். 927

களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும். 928

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. 929

கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு. 930

## சூது

வெற்றிதரினும் சூதினை விரும்பாதே; அவ்வெற்றி
தூண்டிற்கொக்கி மீனை விழுங்கினது போலும். 931

ஒன்றுபெற்றுப் பல இழக்கும் சூதாடிக்கும்
நலமாக வாழும் முறை உண்டாகுமா? 932

காயை ஓயாது சொல்லி உருட்டினால்
பொருள் வருவாய் ஓடிப்போய் விடும். 933

பல இழிவு தந்து பண்பைக் கெடுக்கும்
சூதுபோல் வறுமை தருவது வேறில்லை. 934

சூதாடுகாயும் கழகமும் கையும் விடாது
அழுந்தியவர் வறுமையாகி விடுவர். 935

சூதென்னும் மூதேவிக்கு ஆட்பட்டவர்
வயிறு நிறைய உண்ணாது வருந்துவர். 936

சூதாடு கழகத்துக்கு நாளும் சென்றால்
பழைய செல்வமும் பண்பும் தொலையும். 937

சூது பொருள்கெடுக்கும், பொய்யனாக்கும்;
அருள் கெடுக்கும், துன்பத்தில் அழுத்தும். 938

உடையும் செல்வமும் உணவும் மதிப்பும்
கல்வியும் எல்லாம் சூதாடியை அடையா; 939

தோற்கத் தோற்கச் சூதில் ஆசைவளரும்;
துன்பம் படப்பட வாழ்வில் பற்றுவளரும். 940





## சூது

வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. 931

ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு. 932

உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். 933

சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல். 934

கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார். 935

அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார். 936

பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின். 937

பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது. 938

உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின். 939

இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற்று உயிர். 940

## மருந்து

மருத்துவர் கூறும் வாத பித்த கபங்கள்
கூடினாலும் குறைந்தாலும் நோய் தரும். 941

முன் உண்டது செரித்தது பார்த்து உண்டால்
உடம்புக்கு மருந்து எதுவும் வேண்டாம். 942

செரித்தால் செரிமானம் பார்த்து உண்; அதுவே
உடல்பெற்றவன் நெடுநாள் வாழும்நெறி. 943

செரித்தது பார்த்து அம்முறை பற்றி
ஒத்துக்கொள்வதை நன்கு பசித்தபின் உண்க; 944

ஒத்துக்கொள்வதையும் அளவாக உண்டால்
உயிர்க்கு யாதும் நோய் இல்லை. 945

கழிவறிந்து உண்பவனிடம் உடல்நலம் இருக்கும்;
நிரம்பத் தின்னியிடம் நோய் குடிகொள்ளும். 946

பசியளவு தெரியாமல் மிக உண்டால்
நோய் அளவில்லாமல் வரும். 947

நோயையும் காரணத்தையும் தீர்க்கும் வழியையும்
மருத்துவன் அறிந்து வெற்றியாகச் செய்க. 948

நோயாளியின் நிலையையும் நோயின் நிலையையும்
காலத்தையும் மருத்துவன் அறிந்து செய்க. 949

நோய்யாளி மருத்துவன் மருந்து துணையாளி
என்று நான்கும் மருத்துவத்தின் கூறுகள். 950





## மருந்து

மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. 941

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின். 942

அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு. 943

அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. 944

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு. 945

இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய். 946

தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும். 947

நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 948

உற்றான் அளவும் பிணியளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல். 949

உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்று
அப்பால்நாற் கூற்றே மருந்து. 950

## குடிமை

இயற்கையாகவே ஒழுங்கும் நாணமும்
நற்குடிப் பிறந்தாரிடம் சேர்ந்து இருக்கும். 951

ஒழுக்கம் உண்மைச்சொல் நாணம் மூன்றிலும்
குடிப்பிறந்தவர் என்றும் குறையார். 952

முகமலர்ச்சி கொடை இன்சொல் மதித்தல்
இவை ஒழுங்கான குடியின் இயல்புகள். 953

கோடி கோடி பெற்றாலும் உயர்குடியாளர்
குறைவான காரியங்களைச் செய்யார். 954

கொடுத்தற்குப் பொருள் சுருங்கிய இடத்தும்
பழங்குடி மக்கள் கொடைத்தன்மையை விடார். 955

நற்குடும்பத்துக்கு ஏற்ப நடக்கின்றோம் என்பவர்
வஞ்சகங் கொண்டு பொருந்தாதன செய்யார். 956

வானத்தில் மதிக்கண் களங்கம் போல
உயர்ந்தோர் குற்றம் ஊருக்குத் தெரிந்துவிடும். 957

குடும்பப் பண்பில் பற்றில்லா விட்டால்
அவன் குடும்பப் பிறப்பில் ஐயம் தோன்றும். 958

நிலத்தின் தன்மையை முளை காட்டும்;
குலத்தின் தன்மையைச் சொல் காட்டும். 959

நன்மை வேண்டின் தீயது செய்ய நாணுக;
குலப்பெருமை வேண்டின் யார்க்கும் பணிக. 960





## குடிமை

இற்பிறந்தார் கண்அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. 951

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 952

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு. 953

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 954

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று. 955

சலம்பற்றிச் சார்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார். 956

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து. 957

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும். 958

நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல். 959

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. 960

## மானம்

கட்டாயம் செய்ய வேண்டியன என்றாலும்
பெருமைக்குக் குறைவானவற்றைச் செய்யற்க. 961

பெருமையொடு பேராற்றல் வேண்டுபவர்
புகழ்களில் மானக் குறைவானவை செய்யார். 962

வளம் பெருகும்போது பணிவு வேண்டும்;
வளம் சுருங்கும்போது பெருமிதம் வேண்டும். 963

மக்கள் உயர்ந்த தரத்திலிருந்து இறங்கினால்
தலையிலிருந்து விழுந்த மயிர் போல்வர். 964

குண்டுமணி அளவு தரக்குறைவாக நடந்தால்
மலைபோல் உயர்ந்தவரும் தாழ்வர். 965

மதியாதார் பின்னே மானங்கெட்டு நிற்பதேன்?
புகழ் வருமா? தேவருலகு கிடைக்குமா? 966

பகைவருக்குப் பின்போய் வாழ்ந்தான் என்பதினும்
மானத்தோடு கெட்டான் என்பது நல்லது. 967

மானத்தின் ஏற்றம் அழியும் நிலையில்
உடலை வளர்த்தல் உயிருக்கு மருந்தாகுமா? 968

மயிர் பறிப்பின் இறக்கும் கவரிமான் போன்றவர்
மானம் போவதாயின் உயிரைப் போக்குவர். 969

இழிவு நேர்ந்தால் சாகும் மானமுடையவரின்
புகழ் விளக்கை உலகம் தொழுது போற்றும். 970





## மானம்

இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல். 961

சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 962

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. 963

தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 964

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். 965

புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று. 967

மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து. 968

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 969

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு. 970

## பெருமை

ஊக்கம் மிகுதியே ஒருவர்க்கு மதிப்பாகும்;
அதனை விட்டு வாழ்தல் என்பது குறைவாகும். 971

ஒரு தாய் வயிற்று மக்களுக்குள்ளும்
செயல் வேற்றுமையால் சிறப்பு வேறுபடும். 972

மேலிருந்தும் மேலான செய்யாதார் சிறியவர்;
கீழிருந்தும் கீழான செய்யாதார் பெரியவர். 973

மகளிர் கற்பைத் தாமே காத்தல் போலப்
பெருமையும் அவரவர் காத்தால் உண்டு. 974

பெருமையைக் காத்துக் கொண்டவர் முறையாக
அருமையான காரியங்களைச் செய்து முடிப்பர். 975

பெரியவர்களைப் போற்றிக் கொள்ளும் கருத்து
சிறியவர்கள் அறிவிற் படுவதில்லை. 976

சிறப்புக்கள் இழிந்தவர்களைச் சேருமாயின்
தாறுமாறான காரியங்களே நடக்கும். 977

என்றும் பணிதல் பெருமையின் இயல்பு;
தற்புகழ்ச்சி பாடுதல் சிறுமையின் இயல்பு. 978

தற்செருக்கு இன்மை பெருமையின் குணம்;
தற்செருக்கின் வடிவு சிறுமையின் குணம். 979

பிறர் குற்றம் மறைத்தல் பெருமையின் இயல்பு;
குற்றமே கூறுதல் சிறுமையின் இயல்பு. 980





## பெருமை

ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல். 971

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். 973

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு. 974

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல். 975

சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு. 976

இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். 977

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 978

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல். 979

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 980

## சான்றாண்மை (நிறை குணம்)

கடமை அறிந்து நிறைகுணம் கொண்டவர்க்கு
நல்லவை எல்லாமே கடமைகள் என்பர். 981

நற்குணமே பெரியவர்தம் நலம்; பிறநலங்கள்
அவர்க்கு ஒரு நலமும் இல்லை. 982

அன்பு நாணம் பொதுநலம் இரக்கம் வாய்மை
ஐந்தும் சால்புக் கட்டடத்தின் தூண்கள். 983

ஒருயிரையும் கொல்லாமை தவமாகும்;
யாரையும் குறைகூறாமை சால்பாகும். 984

வலியார்க்கு வலியாவது தாழ்ந்து போதல்;
அதுவே சான்றோர் பகைவரைத் திருத்தும்படை. 985

நிறைகுணத்தை மதிப்பிடும் உரைகல் யாது?
தோல்வியைத் தாழ்ந்தவரிடத்தும் ஏற்பது. 986

துன்பம் செய்தவருக்கும் இன்பம் செய்யாவிடின்
நிறைகுணத்துக்கு என்ன பொருள்? 987

சால்பாகிய உறுதிமாத்திரம் இருக்குமானால்
வறுமை ஒருவர்க்கு இழிவாகாது. 988

நிறைகுணம் என்னும் கடலுக்குக் கரையானவர்
காலம் பிறழ்ந்தாலும் தாம் ஒழுக்கம் பிறழார். 989

நிறைந்தவர் நிறைகுணம் குறைந்தால்
நிலம் பாரம் பொறுக்குமா? 990





## *சான்றாண்மை*

கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு 981

குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று. 982

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். 983

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 985

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல். 986

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. 987

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின். 988

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார். 989

சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. 990

## பண்புடைமை

பண்புடைமை என்ற நடத்தையை யாரிடத்தும்
எளிதாகக் கலந்து பழகுவதால் எய்தலாம். 991

அன்பு கொள்ளுதலும் குடிக்கேற்ப ஒழுகுதலும்
இரண்டும் பண்பான நெறிகளாம். 992

முகமொப்பு ஒருகுடி மக்கள் ஒப்பாகாது;
நிறைந்த குணவொப்பு ஒப்பாகும். 993

விருப்பத்தோடு நன்மை செய்து வாழ்பவரின்
எளிய குணத்தையே உலகம் போற்றும். 994

நட்பிலும் இகழ்ச்சி பிடிக்காது; பண்பாளரிடம்
பகைவரும் மதிக்கும் குணங்களே இருக்கும். 995

பண்புடையார் இருப்பதால் உலகம் இருக்கிறது;
இல்லாவிடின் மண்ணாகிப் போயிருக்குமே. 996

சமுதாயப் பண்பில்லாதவர் அரம்போன்ற
கூரிய அறிஞராயினும் மரம் போல்வர். 997

நட்புக் கொள்ளாமல் தீமை செய்வாரிடத்தும்
பண்பொடு பழகாமை இழிவாகும். 998

யாரோடும் சிரித்துப் பழகத் தெரியாதவர்க்கு
இப்பேருலகம் பகற்காலத்தும் இருளாகும். 999

தீயவன் பெற்ற செல்வம் நல்ல பால்
தீய பாத்திரத்தால் முரிந்து போலாம். 1000





## பண்புடைமை

எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 991

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 992

உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. 993

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு. 994

நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. 995

பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன். 996

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். 997

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை 998

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். 999

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று. 1000

## நன்றியில் செல்வம் (பயனிலாச் செல்வம்)

இடமெல்லாம் பெரும்பொருளை ஈட்டிவைத்து
உண்ணாது செத்தவனுக்கு உரிமை யாதுமில்லை. 1001

எல்லாம் பொருளால் ஆகும் என்று கொடாது
இறுக்கிய பேதைக்கு இழிபிறப்பு உண்டாகும். 1002

ஈட்டிய பொருளை இறுகப் பற்றிக்கொண்டு
புகழ்விட்ட ஆடவர் பூமிக்குப் பாரம். 1003

ஒருவராலும் விரும்பப் படாத கஞ்சன்
தனக்குப் பின் என்று எதனைக் கருதுகிறான்? 1004

பிறர்க்கு வழங்கான் தானும் உண்ணான்
இவனுக்குப் பலகோடி இருந்தால் என்ன? 1005

தானும் நுகரான் ஏழைக்கும் ஈயான்
இவன் பெருஞ்செல்வத்துக்கு ஒரு நோய். 1006

ஏழைக்கு யாதும் ஈயாதவனது செல்வம்
அழகுள்ள குமரி மணவாது மூத்தது போலும். 1007

யாராலும் விரும்பப் படாதவனது செல்வம்
நடுவூரில் நஞ்சுமரம் பழுத்தது போலாம். 1008

அன்பின்றித் தன் வாய்வயிற்றைக் கட்டிச்
சேர்த்த பொருளை எடுத்துக்கொள்வார் யாரோ? 1009

கொடைச் செல்வர்கள் சிலநாள் வறுமைப்படுதல்
மேகம் வறுமைப்படுவது போலும். 1010





## நன்றியில் செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல். 1001

பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு. 1002

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. 1003

எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன். 1004

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல். 1005

ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் தக்கார்க்கொன்று
ஈதல் இயல்பிலா தான். 1006

அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. 1007

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. 1008

அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து. 1010

## நாணுடைமை (வெட்கம்)

வெட்கம் என்பது தீயசெயலுக்கு நாணுதல்;
பெண்களின் வெட்கம் வேறுவகை. 1011

உணவு உடை பின்வழி எல்லார்க்கும் பொது;
வெட்கமே நன்மக்களின் சிறப்பு. 1012

உயிரெல்லாம் உடம்பைப்பற்றி நிற்கின்றன;
நிறைகுணம் வெட்கத்தைப்பற்றி நிற்கின்றது. 1013

பெரியவர்கட்கு வெட்கம் ஓர் அழகாகும்;
வெட்கமில்லாத வீறுநடை நோயாகும். 1014

பிறர்பழிக்கும் தம்பழிக்கும் நாணுபவரை
வெட்கத்தின் வாழ்விடமென உலகுபோற்றும். 1015

நாணாகிய வேலியை அமைத்துக் கொண்டன்றி
உயர்ந்தோர் உலகத்தை மதியார்கள். 1016

நாணம் மிக்கவர் அதற்காக உயிர்விடுவர்;
உயிருக்காக நாணத்தை விடார். 1017

பிறர் வெட்கப்படுதற்குத் தான்வெட்கப் படாவிடின்
அவன் செயலுக்கு அறம் வெட்கப்படும். 1018

கொள்கை தவறினால் குடி அழியும்;
நாணம் கெட்டால் நன்மை கெடும். 1019

நாணம் இல்லாதாரின் நடமாட்டம்
மரப்பாவை கயிற்றால் நடமாடியது போலும். 1020





## நாணுடைமை

கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. 1011

ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 1012

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு. 1013

அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணிஅன்றோ பீடு நடை. 1014

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு. 1015

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர். 1017

பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்
அறம்நாணத் தக்கது உடைத்து. 1018

குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை. 1019

நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

## குடிசெயல் வகை

குடும்பக்கடமை செய்யப் பின்வாங்கேன் என்ற
பெருமைபோலப் பெருமையுடையது வேறில்லை. 1021

நீண்ட முயற்சியும் நிறைந்த அறிவும் என்ற
இரண்டின் பெருஞ்செயலால் குடி பெருகும். 1022

குடும்பத்தை உயர்த்துவேன் என்பானுக்குத்
தெய்வம் வரிந்து கட்டிக்கொண்டு முன்வரும். 1023

தன்குடும்பம் கீழாகாமல் உழைக்கின்றவனுக்கு
இயல்பாக எல்லாம் தானே நிறைவேறும். 1024

குற்றமின்றிக் குடும்பம் காத்து வாழ்பவனைச்
சுற்றமாக உலகம் சுற்றிக் கொள்ளும். 1025

ஒருவர்க்கு நல்லவீரம் என்பது தான்பிறந்த
வீட்டுப்பொறுப்பைத்தனதாக்கிக்கொள்ளுவதே. 1026

போரில் பொறுப்பு பெருவீரரையே சாரும்;
வீட்டுச்சுமை தாங்கவல்லார்மேலே விழும். 1027

கடமை செய்வார்க்குக் காலம் என்பது இல்லை;
சோம்பி வீண்பெருமை கருதின் குடிகெடும். 1028

குடும்பத்தைக் குற்றப்படாமல் காப்பவனது
உடம்பு துன்பத்தின் உறைவிடமோ? 1029

முட்டுக் கொடுக்கும் ஆளில்லாத குடும்பம்
துன்பம் தாக்கினால் அடியோடு விழும். 1030





## குடிசெயல் வகை

கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல். 1021

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையால் நீளும் குடி. 1022

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 1023

சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு. 1024

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 1025

நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். 1026

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும். 1028

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு. 1029

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி. 1030

## உழவு

உலகம் முன்னேறினாலும் உழவுக்குப் பின்னே;
துயரப் பட்டாலும் உழவே தலைத்தொழில். 1031

உழ அஞ்சி ஓடுவாரைத் தாங்குதலால்
உழவரே எல்லார்க்கும் அச்சாணி ஆவர். 1032

உழுது உண்டு வாழ்பவரே உரிமையாளர்;
பிறரெல்லாம் உழவரைத்தொழும் அடிமைகள். 1033

நெற்கதிரின் நிழலில் வாழும் உழவர்கள்
பலரையும் தம் அரசனுக்குக் கீழ்ப்படுத்துவர். 1034

உழுதுண்ணும் உழவர் பிச்சை எடுக்கார்;
பிச்சைக்காரர்களுக்கு ஒளிக்காது கொடுப்பர். 1035

உழவர்கள் வேலைநிறுத்தம் செய்வாராயின்
துறவிகட்கும் பற்றுக்கோடு இல்லை. 1036

பலப்புழுதியைக் காற்புழுதியாகக் காயவிடின்
பிடியளவு உரமின்றியும் நிலம் நன்கு விளையும். 1037

உழுதல் உரமிடல் களைபறித்தல் நீர்பாய்ச்சல்
காத்தல் ஒன்றைவிட ஒன்று நல்லது. 1038

உடையவன் வயலுக்கு நாளும் போகாதிருப்பின்
வயல் மனைவிபோலப் பிணங்கி வாடும். 1039

ஏழை என்று சோம்பியிருப்பாரைக் கண்டால்
நிலமகள் சிரிப்பாள். 1040





## உழவு

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை. 1031

உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். 1034

இரவார் இரப்பார்க்கொன்று ஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். 1035

உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம்என் பார்க்கும் நிலை. 1036

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 1037

ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு. 1038

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். 1040

## நல்குரவு (வறுமை)

வறுமைபோலக் கொடியது ஒன்று உண்டா?
அதுபோலக் கொடுமையுடையது அதுவே. 1041

வறுமை என்ற பேர்பெற்ற பாவி
எப்பிறப்பிலும் தொடர்ந்து வரும். 1042

வறுமைப்பிடி வழிவந்த குடிப்புகழையும்
உடல் வனப்பையும் ஒருங்கே அழிக்கும். 1043

வறுமை உயர்குடிப் பிறந்தாருக்கும்
தாழ்வான சொல்லைச் சொல்லச் செய்யும். 1044

வறுமையாகிய நெருக்கடியில்
பல துன்பங்கள் வந்து சேரும். 1045

நல்ல பொருளை நன்றாகச் சொன்னாலும்
வறியவர் சொல் ஏறாது. 1046

வாழ்வுக்குப் பொருந்தாத வறுமை வரின்
பெற்ற தாயும் யாரோ எனப் பார்ப்பாள். 1047

நேற்றும் வந்த கொலை போன்ற வறுமை
இன்றும் என்னை வாட்டுதற்கு வருமோ? 1048

நெருப்பிற்கூட உறங்கவும் செய்யலாம்;
வறுமையில் சிறிதும் கண்மூட முடியாது. 1049

வறியவர் முற்றும் துறவியாகாது இருத்தல்
உப்புக்கும் கஞ்சிக்கும் தண்டம். 1050





## நல்குரவு

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. 1041

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை. 1043

இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும். 1044

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 1046

அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு. 1048

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது. 1049

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 1050

## இரவு (பிச்சை)

கேட்கத் தக்கவரிடம் உதவி கேட்க;
ஒளித்தால் அவர்க்குப் பழி, உனக்கு இல்லை. 1051

கேட்ட பொருள்கள் கடினமின்றிக் கிடைப்பின்
உதவி கேட்பதும் மகிழ்ச்சியைத் தரும். 1052

ஒளிக்காத மனமும் கடமையுணர்ச்சியும்
உடையவர் முன்நின்று இரத்தலும் ஓர் அழகு. 1053

ஒளிப்பதைக் கனவிலும் அறியாதாரிடம்
சென்று கேட்பது கொடுப்பதை ஒக்கும். 1054

நேர்நின்று ஒருவர் இரக்க முற்படுவது
ஒளிக்காதவர் உலகத்து இருப்பதால் அன்றோ? 1055

ஒளிக்கும் துயரம் இல்லாரைக் கண்டால்
வறுமைத் துயரம் எல்லாம் போய்விடும். 1056

இகழ்ந்து பேசாது கொடுப்பாரைக் கண்டால்
உள்ளம் உள்ளுக்குள்ளே மகிழும். 1057

உதவிகேட்பார் இல்லாவிடின் இப்பேருலகம்
மரப்பாவைபோல உணர்ச்சியற்று நடக்கும். 1058

இரந்து கொள்ள விரும்புவோர் இல்லாதபோது
கொடுப்பவர்க்குப் பெருமிதம் என்ன உண்டு? 1059

இரப்பவனுக்குக் கோபம் வருதல் கூடாது;
தான் வறுமைப்படுவதே அதற்குச் சான்று. 1060





## இரவு

இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று. 1051

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின். 1052

கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று
இரப்புமோ ரேஎர் உடைத்து. 1053

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு. 1054

கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது. 1055

கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும். 1056

இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து. 1057

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 1058

ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. 1059

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரம்பிடும்பை
தானேயும் சாலும் கரி. 1060

## இரவச்சம் (கேட்க அஞ்சுதல்)

ஒளிக்காது மகிழ்ந்து கொடுக்கும் அன்பரிடத்தும்
ஒன்றுபோய்க் கேளாமை கோடி நல்லது. 1061

பிச்சையாலும் வாழ ஏற்படுத்தி இருப்பின்
படைத்தவன் கெட்டு அலைவானாக. 1062

வறுமைத் துன்பத்தை வாங்கித் தீர்ப்பேன்
என்பது பெரிய முரட்டுத்தனமாம். 1063

இல்லாத போதும் இரக்காத நிறைகுணம்
வீடு நிறைந்த செல்வத் தன்மை உடையது. 1064

உழைப்பால் வந்தது கஞ்சித் தண்ணீராயினும்
அதனை உண்பதுபோல் சுவை வேறில்லை. 1065

பசுவுக்குத் தண்ணீர் என்று கேட்டாலும்
கேட்ட நாவிற்குப் பெருமை இல்லை. 1066

கேட்டாலும் ஒளிப்பாரிடம் கேளாதீர் என்று
இரப்பாரை எல்லாம் கேட்டுக் கொள்வேன். 1067

பிச்சை என்னும் துணையற்ற படகு
ஒளிப்பாகிய பாறை மோதின் உடைந்துவிடும். 1068

பிச்சையை நினைத்தால் மனம் குலையும்;
மறைப்பதை நினைத்தால் மனம் சாகும். 1069

கேட்பவருக்குக் கேட்டளவில் போகும் உயிர்
மறைப்பவருக்குப் போகாது எங்கிருக்கும்? 1070





## இரவச்சம்

கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1061

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான். 1062

இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்டது இல். 1063

இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு. 1064

தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல். 1065

ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல். 1066

இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று. 1067

இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 1069

கரப்பவர்க்கு யாங்கொளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். 1070

## கயமை (கீழ்மை)

கயவர் மக்கள்போன்றே இருப்பர்; அன்ன
வடிவொற்றுமையை யாம் கண்டதில்லை. 1071

மெய்யறிஞர் போலக் கயவரும் மகிழ்வுடையர்;
ஏன்? மனத்தில் எதற்கும் கவலைப் படார். 1072

கயவர்கள் அரசர் போன்றவர்கள்; ஏன்?
தாம் விரும்பியபடியே நடப்பார்கள். 1073

கயவர் தம்மினும் இழிந்தவரைக் கண்டால்
அவரால் போற்றப்பட்டு இறுமாப்பர். 1074

அச்சமே கயவர்களின் இயல்பு;
புகழாசை இருந்தால் சிறிது இருக்கலாம். 1075

கயவர் அறிவிக்கும் பறைபோல்வர்; ஏன்?
மறைச்செய்தியைப் பிறரிடம் போய்க்கூறுவர். 1076

பல்லை உடைக்கும் கொடுங்கையர்க்கு அன்றிக்
கயவர்கள் எச்சிற்கையும் உதறமாட்டார்கள். 1077

சொன்ன அளவிலே பயன்செய்வர் மேலோர்;
கரும்புபோல் நசுக்கின் பயன்செய்வர் கீழோர். 1078

உண்டு உடுத்து நடப்பதைக் கண்டாலே
அவர்கள்மேல் குற்றஞ் சுமத்துவான் கயவன். 1979

எதற்குத் தகுதி கயவர்? ஏதும் கிடைப்பின்
விரைந்து தன் மானத்தை விற்கத் தகுதி. 1980





## *கயமை*

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்டது இல். 1071

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர். 1072

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான். 1073

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். 1074

அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது. 1075

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான். 1076

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு. 1077

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ். 1079

எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து. 1080

## தகையணங்குறுத்தல் (அழகு வருத்தல்)

தெய்வமோ மயிலோ தோடணிந்த பெண்ணோ
என்று என் நெஞ்சம் மயங்கும். 1081

பார்த்தவள் மேலும் எதிர்ப்பார்வை பார்த்தல்
கொடுந்தெய்வம் சேனையோடு தாக்கியதுபோல். 1082

கூற்றை முன்பு கண்டறியேன்; இன்றறிந்தேன்;
பெண்மையும் பெருங்கண்ணும் உடையது. 1083

பார்த்தவரின் உயிர்குடிக்கும் கவர்ச்சிகொண்டு
பெண்ணின் கண்கள் போர்செய்கின்றன. 1084

இது எமனோ கண்தானோ பெண்மானோ
இவள் பார்வையில் இம் முக்குணமும் உண்டு. 1085

வளைந்த புருவம் நேர்நின்று தடுப்பின்
இவள் கண்கள் என்னை நடுக்கா. 1086

கைபடாத முலைமேல் கிடக்கும் மெல்லாடை
மதயானைக்கு இட்ட முகமூடி போலும். 1087

போரில் வராதவரும் அஞ்சும் என் ஏற்றம்
இந்த நெற்றி யழகுக்கே உடைந்து விட்டதே! 1088

மான்பார்வையும் வெட்கமும் உடையவளுக்கு
வேறு அணிகள் போடுதல் எதற்கு? 1089

கள் குடித்தால்தான் மகிழ்ச்சிதரும்; காமம்போல்
பார்த்தளவில் மகிழ்ச்சி தருமா? 1090





## தகையணங்குறுத்தல்

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு. 1081

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. 1082

பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு. 1083

கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்டகைப்
பேதைக்கு அமர்த்தன கண். 1084

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085

கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்இவள் கண். 1086

கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். 1087

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு. 1088

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து. 1089

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. 1090

## குறிப்பறிதல்

இவள் மைக்கண்ணில் இருபார்வை உண்டு;
ஒன்று நோயாகும்; ஒன்று மருந்தாகும். 1091

கண்கொண்டு கவரும் சிறிய பார்வை
இன்பத்தில் சரிபாதியினும் கூடுதலாகும். 1092

பார்த்தாள் பார்த்துக் குனிந்தாள்; அது அவள்
காதற் பாத்தியில் இறைத்த நீராகும். 1093

நான் பார்க்கும்போது நிலம் பார்ப்பாள்;
பாராக்கால் என்னைப் பார்த்துப் புன்சிரிப்பாள். 1094

என்னை நேராகப் பார்க்கவில்லையே யன்றி
ஒருகண்ணை இடுக்கினாற்போலச் சிரிப்பாள். 1095

உறவில்லாதவர் போலச் சொன்னாலும்
வெறுப்பில்லாதவர் சொல் விரைவில் புரியும். 1096

பகையாத கடுஞ்சொல் பகைபோல் பார்வை
இவை அயலவர் போன்ற அன்பர் குறிப்பு. 1097

யான் பார்க்க நெகிழ்ந்து மெல்லச் சிரிப்பாள்;
மெல்லியலுக்கு அப்போது ஓர் அழகு உண்டு. 1098

அயலவர்போல மேலோடாகப் பார்த்தல்
காதலரிடமே உண்டு. 1099

கண்ணோடு கண் இணையும் பார்வை இசையின்
வாய்ப்பேச்சுக்கு என்ன பயன் உண்டு? 1100





## குறிப்பறிதல்

இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. 1091

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது. 1092

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர். 1093

யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும். 1095

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும். 1096

செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்று உற்றார் குறிப்பு. 1097

அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். 1098

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. 1099

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல. 1100

## புணர்ச்சி மகிழ்தல்

கண்டு கேட்டு உண்டு முகர்ந்து தொடும்
ஐம்புல இன்பமும் இவளிடமே உண்டு. 1101

நோய்வேறு அதற்கு மருந்து வேறு;
இவள் தந்த நோய்க்கோ இவளே மருந்து. 1102

தன்காதலியின் மென்தோளில் துயிலுதலைவிடத்
திருமாலின் மேலுலகம் இனிதாமோ? 1103

நீங்கினால் சுடும், நெருங்கினால் குளிரும்;
இன்ன தீயை இவள் எங்கிருந்து பெற்றாள்? 1104

பூங்கொத்து நிறைந்த கூந்தலவள் தோள்கள்
விரும்பியபோது விரும்பிய பொருள் ஆகியவை. 1105

உடல் அணையுந்தோறும் உயிர் தழைத்தலால்
இவளுக்குத் தோள்கள் அமிழ்தால் ஆயவை. 1106

அழகிய மாநிறப் பெண்ணைத் தழுவுதல்
தன்வீட்டிலிருந்து தன்பங்கை உண்பதுபோல். 1107

காற்றும் புகாதபடி தழுவும் தழுவல்
காதலர் இருவர்க்கும் பேரின்பமாம். 1108

பிணங்குதல் தெளிதல் சேருதல் இவை
இன்பக் கூட்டுறவினர் பெற்ற பயன்கள். 1109

நகையுடையாளைக் கூடுந்தோறும் காமவுணர்ச்சி
அறிய அறிய அறியாமையை அறிவதுபோலும். 1110





## ***புணர்ச்சி மகிழ்தல்***

கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள. 1101

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். 1105

உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். 1106

தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 1107

வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. 1108

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். 1109

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. 1110

## நலம் புனைந்துரைத்தல்

அனிச்சப்பூவே! நற்பண்பு உடையாய் வாழ்க;
என் காதலி உன்னைவிட மென்மையள். 1111

நான்ஒருவன் பார்க்கும் இவள்கண், மனமே!
பலர்பார்க்கும் மலர் ஒக்குமென மயங்குகிறாய். 1112

மூங்கில் போலும் தோளிக்குத் தளிரே மேனி
முத்தே பல், மலரே மணம், வேலே கண். 1113

குவளைகள் இவள் கண்ணைக் காண நேர்ந்தால்
உவமையாகோம் என்று தலைசாய்த்துக் குனியும். 1114

ஓர் அனிச்சமலரைக் காம்புடன் சூடினாள்;
இவள்இடைக்கு நல்ல பறைகள் ஒலியா. 1115

வானவட்டத்துச் சுழன்றுதிரியும் விண்மீன்கள்
இது திங்கள் இது மாதர் முகம் என அறியா. 1116

குறைந்து நிறையும் திங்களுக்குப் போலக்
காதலி முகத்தில் களங்கம் உண்டோ? 1117

என்காதலி முகம்போல ஒளிவிட முடியின்
திங்களே! நீயும் என்காதலுக்கு உரியை. 1118

மலர் கண்ணாளின் முகம்போல் ஆகவிரும்பின்
திங்களே! பலர் பார்க்கத் தோன்றாதே. 1119

அனிச்ச மலரும் அன்னத்தின் இறகும்
காதலியின் அடிக்கு நெருஞ்சி முள். 1120





## நலம் புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள் 1111

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. 1112

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. 1113

காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று. 1114

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. 1115

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன். 1116

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. 1117

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. 1118

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி. 1119

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

## காதற் சிறப்புரைத்தல்

கொஞ்சுமொழி பேசும் வெண்பல்லில் ஊறிய நீர்
பாலும் தேனும் கலந்தாற் போலும். 1121

உடம்புக்கும் உயிருக்கும் என்ன உறவு
அன்ன உறவு இவளுக்கும் எனக்கும். 1122

என் நெற்றியழகிக்கு இடம் வேறில்லை;
கருவிழியிற் பாவையே! நீ போய்விடு. 1123

புணருங்கால் உயிர் இருத்தல் போன்றவள்;
பிரியுங்கால் அது பிரிதல் போன்றவள். 1124

போராடும் கண்களை யுடையவள் குணங்களை
மறந்தால் நினைப்பேன்; மறக்கவே இல்லை. 1125

எம் காதலர் மிகவும் சிறிய வடிவினர்;
கண்ணுள் இருப்பார், இமைப்பின் வருந்தார். 1126

காதலர் கண்ணுள் இருக்கின்றார் ஆதலின்
சிறிது மறைவார் என்றஞ்சி மையும் தீட்டேன். 1127

காதலர் நெஞ்சில் உள்ளார் ஆதலின்
வெந்து போவார் என்று சூடாக உண்ணேன். 1128

இமைத்தால் மறைவாரென இமையேன்: அதற்கே
அவரை அயலவர் என்று இவ்வூர் தூற்றும். 1129

என்நெஞ்சில் என்றும் மகிழ்ந்து இருக்கின்றார்;
பிரிந்தார் அயலவர் என்று ஊர் பழிக்கும். 1130





## *காதற் சிறப்புரைத்தல்*

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர். 1121

உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். 1123

வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து. 1124

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம். 1125

கண்ணுள்ளின் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர்எங் காத லவர். 1126

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக்கு அறிந்து. 1127

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. 1128

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர். 1129

உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்
ஏதிலர் என்னும்இவ் வூர். 1130

## நாணுத் துறவுரைத்தல்

காமத்தில் பட்டு வருந்தினவர்கட்கு மடல்
ஏறுதலல்லது வேறு பற்றுக்கோடு இல்லை. 1131

காமம் தாங்காத உடம்பும் உயிரும்
வெட்கத்தை விட்டு மடல் ஏறத் துணியும். 1132

நாணமும் வீரமும் முன்பிருந்தன; இன்றோ
காமங்கொண்டார் ஏறும் மடற்குதிரை உண்டு. 1133

நாணமும் வீரமும் ஆகிய தெப்பம் என்னைக்
காமப் பெருவெள்ளத்தில் தள்ளிவிடுமே. 1134

மடலோடு மாலையிற் படும் காமத்துயரை
அடுக்கிய வளையல் அணிந்தவள் தந்தாள். 1135

மடலேறுதலை நடுயாமத்தும் நினைப்பேன்; ஏன்?
காதலியை நினைத்து என் கண்கள் மூடா. 1136

கடல்போன்ற காமத்து வருந்தினும் மடலேறாப்
பெண்பிறவியே பெருமைக்கு உரியது. 1137

திட்பமற்றவர் அருளத் தக்கவர் என்னாது
காமம் ஒளிக்க முடியாமல் அம்பலப்படும். 1138

இதுவரை யார்க்கும் தெரியாது என்பதனால்
என்காமம் மயங்கித் தெருவெல்லாம் திரியும். 1139

நான் பட்டது தாங்கள் படாமையினால்
பேதையர்கள் என் கண்பார்க்கச் சிரிப்பார்கள். 1140





## *நாணுத் துறவுரைத்தல்*

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடலல்லது இல்லை வலி. 1131

நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. 1132

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல். 1133

காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை. 1134

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர். 1135

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்கென் கண். 1136

கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல். 1137

நிறையரியர் மன்அளியர் என்னாது காமம்
மறையிறந்து மன்று படும். 1138

அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு. 1139

யாங்கண்ணின் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 1140

## அலர் அறிவுறுத்தல்

ஊர் தூற்றுவதால் என் உயிர் வாழ்கின்றது;
நல்லகாலமாக அது பலருக்குத் தெரியாது. 1141

மலர்போல் கண்ணாளின் அருமையை அறியாமல்
இந்த ஊர் எனக்கு அலரைத் தந்தது. 1142

ஊர்ப்பேச்சு எனக்கு வாராதோ? அதனைப்
பெறாமலே பெற்றது போல் என் மனம் மகிழும். 1143

காதல் ஊர்ப்பேச்சால் கவர்ச்சி அடைகின்றது;
இல்லாவிடின் சிறப்பிழந்து சப்பென்றிருக்கும். 1144

மகிழ மகிழ கள்ளில் ஆசை பெருகும்;
பலர் அறிய அறியக் காதல் சிறக்கும். 1145

அவரைக் கண்டது ஒருநாள்தான்; ஊர்ப்பேச்சோ
திங்களைப் பாம்பு பிடித்தது போலப் பரவியது. 1146

ஊர்ப்பேச்சு உரம்; தாயின் கடுஞ்சொல் நீர்;
இப்படியாக வளரும் இக்காதற் பயிர். 1147

ஊர்ப்பேச்சால் காமத்தீயை அணைக்க முடியுமா?
நெய்யூற்றி நெருப்பை நூக்க முடியுமா? 1148

அஞ்சாதே என்றவர் பலரறியப் பிரிந்தபோது
ஊர்ப்பேச்சுக்கு அஞ்சி இருக்க முடியுமா? 1149

காதலர் அவர் விரும்பினால் அருளுவார்;
இவ்வூர் நாம் எதிர்பார்த்தபடி தூற்றுகின்றது. 1150





## *அலர் அறிவுறுத்தல்*

அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால். 1141

மலரன்ன கண்ணாள் அருமை அறியாது
அலரெமக்கு ஈந்ததிவ் வூர். 1142

உறாஅதோ ஊரறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து. 1144

களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது. 1145

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய். 1147

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் வூர். 1150

## பிரிவாற்றாமை

பிரியேன் எனின் எனக்குச்சொல்; பிரிந்தால் நின்
வேண்டா வருகையை இருப்பார்க்குச் சொல். 1151

அவர் பார்வை இனிமையுடையது; புணர்ச்சியோ
பிரிவுக்கு அஞ்சும் துன்பக் குறிப்பு உடையது. 1152

பிரியேன் என்றவர் ஒரு சமயம் பிரிதலால்
நன்கு தெரிந்தவரையும் நம்புதல் அரிதாம். 1153

அணைத்துக் 'கலங்காதே' என்றவர் பிரிந்தால்
உறுதியை நம்பியவர்மேல் குற்றம் உண்டோ? 1154

தடுப்பின் புறப்படுவார் பிரிவைத் தடுக்க;
அவர் பிரியின் நான் இருந்து கூடுதல் எங்கே? 1155

பிரிவு பேசும் துணிவுடையர் ஆயின் வந்து
அருளுவார் என எதிர்பார்த்தல் பயனற்றது. 1156

மணிக்கட்டிலிருந்து கழலுகின்ற வளையல்கள்
தலைவன் பிரிவை வெளிப்படுத்த வில்லையா? 1157

உறவில்லாத ஊரில் வாழ்தல் துன்பம்;
இன்பக் காதலரைப் பிரிதல் பெருந்துன்பம். 1158

தீ தொட்டால் சுடும்; காமசுரம் போல
விட்டாலும் சுடுமோ? 1159

பொறுத்துத் துன்பம் நீக்கிப் பிரிவைத் தாங்கி
அவருக்குப் பின்னும் இருப்பார் பலர். 1160





## *பிரிவாற்றாமை*

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை. 1151

இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு. 1152

அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். 1153

அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. 1154

ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு. 1155

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை. 1156

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157

இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. 1158

தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ. 1159

அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர். 1160

## படர்மெலிந் திரங்கல்

நான் காம நோயை மறைக்க மறைக்க அது
இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போலப் பெருகும். 1161

மறைக்க முடியவில்லை; நோய் செய்தாருக்கு
நாணம்விட்டு உரைக்கவும் முடியவில்லை. 1162

பொறுக்காத என் உடம்பினுள் காமமும் நாணமும்
உயிர்காவடியின் இருபுறமும் தொங்குகின்றன. 1163

காமக்கடல் மட்டும் உண்டு; அதனைக் கடக்கச்
சேமத் தெப்பந்தான் இல்லை. 1164

துயரத்தை உறவினர்க்குச் செய்ய வல்லவர்
பகைவர்க்கு என்னதான் செய்ய மாட்டார்? 1165

காம இன்பம் கடலாகும்; வருத்தும்போது
காமத்துன்பம் கடலினும் பெரிதாகும். 1166

காம வெள்ளத்து நீந்திக் கரைதெரியேன்;
நடுச்சாமத்தும் தனியே விழித்துள்ளேன். 1167

எல்லா உயிரையும் துயிலச்செய்து அருளியபின்
இரவிற்கு என்னை யல்லது துணையில்லை. 1168

இப்போது நேரமாகி விடியும் இரவுகள்
பிரிந்த தலைவரினும் கொடுமையுடையன. 1169

அவர் இடத்துக்கு என்மனம் போவதுபோல்
கண்களும் போக முடியின் கண்ணீரில் நீந்தா. 1170





## *படர்மெலிந் திரங்கல்*

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். 1161

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும். 1162

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பி னகத்து. 1163

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். 1164

துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். 1165

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது. 1166

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன். 1167

மன்னுயி ரெல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்லது இல்லை துணை. 1168

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா. 1169

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். 1170

## கண் விதுப்பழிதல்

தீராத நோயைக் கண்காட்ட நான் பெற்றேன்;
நோய் தந்த கண் இப்போதுஏன் அழுகின்றன? 1171

அன்று ஆராயாது அவரை நோக்கிய கண்கள்
இன்று பொறுக்காமல் துன்பப் படுவது ஏன்? 1172

அன்று விரைந்து பார்த்தன; இன்று அழுகின்றன;
இது கேலிக்கு உரியது. 1173

தப்ப முடியாத நோயை எனக்குத் தந்து விட்டுக்
கண்கள் இனி அழமுடியாமல் வறண்டன. 1174

கடலினும் பெரிய காமம் தந்த என் கண்கள்
தூங்கமுடியாது துன்பப் படுகின்றன. 1175

எனக்கு இத்துன்பம் தந்த கண்கள் தாமும்
அத்துன்பப் படுவது எவ்வளவோ மகிழ்ச்சி. 1176

விரும்பி உருகிக் காதலரைக் கண்ட கண்கள்
வருந்தி வருந்தி வறண்டு போகட்டும். 1177

மனமின்றியே காதலித்தார் ஒருவர் உளர்;
அவரைப் பாராது கண்கள் தூங்கா. 1178

அவர் வாராவிடினும் தூங்கா; வரினும் தூங்கா;
இருநிலையிலும் கண்கள் பெருந்துயர்ப்பட்டன. 1179

பறைபோலும் கண்ணுடைய மகளிரிடமிருந்து
மறைவை ஊரார் அறிதல் கடினமில்லை. 1180





## கண்விதுப்பழிதல்

கண்தாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது. 1171

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்பது எவன். 1172

கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து. 1173

பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து. 1174

படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்
காமநோய் செய்தஎன் கண். 1175

ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது. 1176

உழந்துழந்து உள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். 1177

பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணாது அமைவில கண். 1178

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண். 1179

மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து. 1180

## பசப்புறு பருவரல்

பிரிவை விரும்பியவர் கொடுமைக்கு இசைந்தேன்;
பின் என்பசலையை யார்க்குச் சொல்வது? 1181

தந்தவர் அவர் என்னும் பெருமிதங் கொண்டு
பசலை படர்ந்து என் மேனிமேல் ஏறும். 1182

காமத்தையும் பசலையையும் மாற்றாகத் தந்து
சாயலையும் நாணையும் எடுத்துக் கொண்டார். 1183

நினைப்பதும் பேசுவதும் எல்லாம் அவரையே;
இருந்தும் பச்லைவந்தது கள்ளத்தனமா வேறா? 1184

அதோ பார்! காதலர் போகிறார்; இதோ பார்!
என்மேனிமேல் பசலை படர்கிறது. 1185

இருள் வெளிச்சம் மறைவதை எதிர்ப் பார்க்கும்;
பசலை தலைவன் தழுவாமையை எதிர்பார்க்கும். 1186

தழுவிக்கிடந்த நான் சிறிது தள்ளிப்படுத்தேன்;
அவ்வளவிற்கே பசலை கொட்டிக் கிடந்தது. 1187

பசலையுற்றாள் இவள் எனப் பழிக்கின்றனர்;
பிரிந்தாரே அவர் எனச் சொல்வார் இல்லை. 1188

பிரிவை இசைவித்த தோழி நலம் எனின்
பட்டுப் போலும் என் மேனி பசக்கட்டும். 1189

தோழி அவர் கொடுமையைத் தூற்றாளெனின்
பசலைப்பேர் பற்றிக் கவலையில்லை. 1190





## *பசப்புறு பருவரல்*

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்
பண்பியார்க்கு உரைக்கோ பிற. 1181

அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு. 1182

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து. 1183

உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு. 1184

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது. 1185

விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. 1186

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. 1187

பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல். 1188

பசக்கமன் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின். 1189

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். 1190

## தனிப்படர் மிகுதி

நாம் காதலித்தவர் நம்மைக் காதலித்தால்
கொட்டையிலாத காமப்பழம் பெற்றது போலும். 1191

காதலியர்க்குக் காதலர் காட்டும் அன்பு
எதிர்பார்த்த உழவர்க்கு மழைபெய்ததுபோல். 1192

காதலரால் என்றும் காதலிக்கப் பட்டார்க்கு
வாழ்கின்றோம் என்ற பெருமிதம் பொருந்தும். 1193

தாம் விரும்பியவரே விரும்ப வில்லை யெனின்
விரும்பிய மகளிர் எவ்வுறவும் இல்லாதவர். 1194

நாம் காதலித்தவர் நம்மைக் காதலிக்கா விடின்
அவர் நமக்கு வேறு என்ன நலம் செய்வார்? 1195

காமம் ஒரு பக்கம் இருப்பது துன்பம்; காவடிப்
பாரம்போல் இருபக்கமும் இருப்பது இன்பம். 1196

மன்மதன் ஒருவரிடமே இருக்கின்றான் ஆதலின்
காமத் துன்பமும் வருத்தமும் அறியானோ? 1197

காதலரின் இன்சொல்லைப் பெறாமல் பிரிந்து
உலகத்து இருக்கும் மகளிரே கொடியவர். 1198

காதலர் அருளார் எனினும் அவரைப் பற்றிக்
கூறும் புகழ்ச் சொற்கள் காதுக்கு இன்பமாம். 1199

துன்பப் படாதவர்க்கு நீஉற்ற துன்பத்தைத்
தூதாற் சொல்; நெஞ்சே! கடலை வெறுக்காதே. 1200





## தனிப்படர் மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. 1191

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு. 1193

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின். 1194

நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை. 1195

ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. 1196

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். 1197

வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல். 1198

நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு. 1199

உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. 1200

## நினைந்தவர் புலம்பல்

நினைத்தாலும் நீங்காத மகிழ்ச்சி தருதலால்
கள்ளைக் காட்டிலும் காமம் இன்பமானது. 1201

எந்த அளவிற்கும் இனியது காமம்;
காதலர் நினைத்தால் துன்பம் ஒன்றும் வராது. 1202

தும்மல் வருவதுபோல நின்றுவிடுதலின் அவர்
என்னை நினைப்பதுபோல விட்டுவிடுவாரோ? 1203

அவர் நெஞ்சில் நான் இருக்கின்றேனா?
என் நெஞ்சிலோ அவர் நன்றாக இருக்கின்றார். 1204

தன் நெஞ்சில் என்னை வரவொட்டாதவர்
என் நெஞ்சில் ஓயாது வர நாணவில்லையே. 1205

அவரோடு கூடியிருந்த நாட்களை நினைப்பதால்
வாழ்கின்றேன்; வேறு எதனால் வாழ்கின்றேன்? 1206

கூட்டத்தை மறந்தால் என்னாவேன்? மறவேன்;
பிரிவை நினைப்பினும் உள்ளம் கொதிக்கும். 1207

எத்தனைமுறை நினைத்தாலும் காதலர் சினவார்;
எனக்கு அவர்காட்டும் பெருமை அவ்வளவு. 1208

நாம் ஒருவர் என்று சொன்ன காதலரின்
கொடுமையை மிக எண்ணி என்உயிர் போகும். 1209

துணிந்து சென்றவரைக் கண்டுபிடிப்பதற்குள்
திங்களே! நீ மறைந்து விடாதே; வாழ்க. 1210





## *நினைந்தவர் புலம்பல்*

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது. 1201

எனைத்தொன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன்று இல். 1202

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எந்நெஞ்சத்து
ஓஒ உளரே அவர். 1204

தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எந்நெஞ்சத்து ஓவா வரல். 1205

மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். 1206

மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும். 1207

எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு. 1208

விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து. 1209

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி. 1210

## கனவுநிலை உரைத்தல்

காதலரின் தூதாக வந்த கனவுக்கு
என்ன விருந்து நான் செய்வேன்? 1211

கண்கள் தூங்கின் கனவில் வரும் காதலர்க்கு
எப்படிப் பிழைத்துள்ளேன் என்பது சொல்வேன். 1212

நனவிலே வந்து அணையாத காதலரைக்
கனவிலேனும் பார்த்தலின் என்உயிர் உண்டு. 1213

நனவில் அருளாதவரைத் தேடிக் காட்டுதற்குக்
கனவில் காமம் உண்டாகின்றது. 1214

கனவும் பார்க்கும் அப்போது இனிது; நனவும்
அவரைப் பார்க்கும் அப்போது இனிது. 1215

விழிப்புநிலை என்பது ஒன்று இல்லையெனின்
காதலர் கனவை விட்டு நீங்கார். 1216

நேரிலே வந்து அன்பு செய்யாத கொடியவர்
கனவிலே வந்து என்னை வருத்துவது ஏன்? 1217

தூங்கும்போது கனவில் தோள்மேல் இருந்து
விழித்தவுடன் நெஞ்சிற்குள் போய்விடுவார். 1218

கனவிலும் காதலரைக் காணாதவர்கள்தாம்
நேரிலே அருளாத அவரைப் பழிப்பர். 1219

நனவிலே விட்டுப்பிரிந்தார் என்பர் இவ்வூரார்;
கனவிலே வருவதை அறியமாட்டார்களோ? 1220





## *கனவுநிலை உரைத்தல்*

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன். 1212

நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர். 1213

கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது. 1215

நனவென ஒன்றில்லை யாயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன். 1216

நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்எம்மைப் பீழிப் பது. 1217

துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து. 1218

நனவினால் நல்காரை நோவர் கனவினால்
காதலர்க் காணா தவர். 1219

நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூ ரவர். 1220

## பொழுதுகண்டு இரங்கல்

பொழுதே! நீ மாலைக்காலமா? இல்லை;
கூடிப்பிரிந்தார் உயிர்குடிக்கும் கூரியவேல். 1221

மயங்கும் மாலையே! நீயும் வருந்துகின்றாய்;
என் காதலன்போல் நின்காதலனும்கொடியனா? 1222

நடுங்கி வருந்தும் மாலை வெறுப்பு ஊட்டிப்
பிரிவுத் துன்பம் பெருகுமாறு வருகின்றது. 1223

காதலர் இல்லாதபோது மாலைக் காலம்
கொலைக்களத்துக்குப் பகைவர்போல் வரும். 1224

காலைப் பொழுதுக்கு நான் செய்த நலம் என்ன?
மாலைப் பொழுதுக்கு நான் செய்த தீமை என்ன? 1225

மாலைக்காலம் நோய் செய்யும் என்பது
காதலர் பிரியாதபோது எனக்குத் தெரியாது. 1226

காமம் என்னும் பூ காலையில் அரும்பும்;
பகலெல்லாம் மொட்டாகும்; மாலையில் மலரும். 1227

புல்லாங்குழல் என்னைக் கொல்லும் படையாகும்;
தீப்போன்ற மாலைக்குத் தூதும் ஆகும். 1228

திங்களோடு மாலைக்காலம் வரும்போது
ஊரே மயங்கி வருந்தும். 1229

பொருள் மயக்கம் உடையவரை நினைந்து
பொறுத்த என்னுயிர் இம்மாலையில் போகும். 1230





## பொழுதுகண்டு இரங்கல்

மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1221

புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. 1222

பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும். 1223

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். 1224

காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன். 1226

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய். 1227

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயும்என் மாயா உயிர். 1230

## உறுப்புநலன் அழிதல்

நமக்குத் துன்பம் தந்து தொலை சென்றாரை
நினைந்தழுத கண்கள் மலருக்கு நாணின. 1231

சோகை நிறம் பெற்று அழுகின்ற கண்கள்
காதலரின் கொடுமையைக் காட்டுவன போலும். 1232

கூடியநாளில் பெருத்த தோள்கள் மெலிந்து
அவர் பிரிவை அம்பலப்படுத்துவன போலும். 1233

துணைவரைப் பிரிந்து அழகு வாடிய தோள்கள்
பருமன் நீங்கி வளையல்களைக் கொட்டும். 1234

வளையல்களும் வனப்பும் சுருங்கிய தோள்கள்
கொடியவரின் கொடுமையைச் சொல்லுகின்றன. 1235

வளையலும் தோளும் நெகிழ்வதால் அவரைக்
கொடியரெனக் கூறக்கேட்டு வருந்துகிறேன். 1236

காதலர்க்கு மெலியும் தோள்களின் மாறுபாட்டைச்
சொல்லி, நெஞ்சே! பெருமை அடையாயா? 1237

அணைத்த கைகளைத் தளர்த்திய அளவிற்கே
இப்பேதையின் நெற்றி பசலை பெற்றது. 1238

தழுவலிடைக் குளிர்காற்றுப் புகுந்த அளவிற்கே
இப்பேதையின் குளிர்ந்த கண்கள் பசந்தன. 1239

நல்ல நெற்றி பசலை அடைந்ததைப் பார்த்துக்
கண்ணின் பசலையோ வருத்தப் பட்டது. 1240





## உறுப்புநலன் அழிதல்

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண். 1231

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண். 1232

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 1233

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 1234

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 1235

தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து. 1236

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோள் பூசல் உரைத்து. 1237

முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 1238

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். 1239

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

## நெஞ்சொடு கிளத்தல்

சிறிதாயினும் காமநோய் தீர்க்கும் மருந்தினை
நெஞ்சே! எண்ணிப் பார்த்துச் சொல்லாயா? 1241

நம்மேல் காதல் இவருக்கு இல்லாத போது
நீ வருந்துவது நெஞ்சே! மடமை. 1242

நெஞ்சே! நீ இருந்து நினைத்து வருந்துவதேன்?
அன்பெண்ணம் நோய் செய்தாருக்கு இல்லை. 1243

நெஞ்சே! கண்களையும் அழைத்துக்கொண்டு போ;
அவரைக் காண விரும்பி என்னைத் தின்னும். 1244

நாம் துன்புற்றாலும் வாராதவர், நெஞ்சே!
நம்மைக் கைவிட்டாரென விட முடியுமா? 1245

கூடியுணர்த்தும் அவரைக்கண்டால் வெறுக்காய்;
நெஞ்சே! இப்போது பொய்யாக வெறுக்கிறாய். 1246

காமத்தை விடு அல்லது நாணத்தை விடு;
நெஞ்சே! இரண்டையும் நான் தாங்கேன். 1247

காதலர் அருளார் என்றேங்கி நெஞ்சே!
பிரிந்தவர்பின் போவாய்; நீ பேதை. 1248

காதலர் உள்ளத்தில் இருக்கவும் நெஞ்சே!
நீ யாரிடம் சொல்ல நினைக்கின்றாய்? 1249

வாராது துறந்தவரை நெஞ்சில் வைத்திருக்கவும்
இன்னும் அழகை இழக்கின்றோம். 1250





## நெஞ்சொடு கிளத்தல்

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. 1241

காதல் அவரில ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. 1242

இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். 1243

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று. 1244

செற்றா ரெனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். 1245

கலந்துணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு. 1246

காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேன்இவ் விரண்டு. 1247

பரிந்தவர் நல்காரென்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு. 1248

உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு. 1249

துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின். 1250

## நிறையழிதல்

நாணத் தாழ்ப்பாள் இட்ட உறுதிக் கதவைக்
காமக் கோடாலி தகர்த்து விடும். 1251

காமம் என்பது சிறிதும் இரக்கம் இல்லாமல்
என் நெஞ்சத்தை நடுயாமத்தும் ஆளுகின்றது. 1252

நான் காமத்தை மறைக்கத்தான் செய்கின்றேன்;
திடீரெனத் தும்மல்போல் வெளியாகின்றது. 1253

உறுதியுடையேன் என்று சொல்லுவேன் நான்;
என் காமமோ ஒளிவின்றி அம்பலப்படும். 1254

வெறுத்தவர்பின் செல்லாத மானவுணர்ச்சி
காமநோயாளிக்குத் தெரியக் கூடியதன்று. 1255

வெறுத்தவரின் பின்னே செல்ல விரும்புதலால்
என்னைச் சேர்ந்த நோய் இரங்கத்தக்கது. 1256

காதலர் காமத்தோடு நாம் விரும்பியன செய்யின்
நாணம் என்ற உணர்ச்சி நமக்குத் தெரியாது. 1257

பசப்புடைய காதலனது தாழ்ந்த மொழியன்றோ
நம்பெண்மைக் கதவைத் தகர்க்கும் படை. 1258

நெஞ்சம் கூடவிரும்புவதைப் பார்த்துவிட்டுப்
பிணங்கச் சென்ற நானும் தழுவினேன். 1259

தீயில் இட்ட கொழுப்புப்போல் உருகுபவர்க்குக்
காதலரை நெருங்கி ஊடி நிற்க முடியுமா? 1260





## நிறையழிதல்

காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1251

காம மெனஒன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில். 1252

மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும். 1253

நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்
மறையிறந்து மன்று படும். 1254

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன்று அன்று. 1255

செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றென்னை உற்ற துயர். 1256

நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின். 1257

பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. 1258

புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு. 1259

நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல். 1260

## அவர்வயின் விதும்பல்

அவர்வரும் வழிபார்த்துக் கண்களும் மழுங்கின;
அவர்சென்ற நாள்எண்ணி விரலும் தேய்ந்தன. 1261

தோழியே! இன்று அவரை மறந்தால் .
என்தோள் அழகு கெட்டு வளை கொட்டும். 1262

உறுதியை நம்பி ஊக்கத்தோடு சென்றவர்
வருதலை நம்பி இன்னும் வாழ்கின்றேன். 1263

கூடிப்பிரிந்தவர் வருகின்றாரா என்று
என்நெஞ்சம் கிளைதோறும் ஏறிப் பார்க்கும். 1264

என் காதலனைக் கண்ணாரக் காண்பேன்; பின்பு
என் தோளின் பசலைநிறம் நீங்கிவிடும். 1265

என் காதலன் ஒருநாள் என்னிடம் வருவான்;
என்நோயெல்லாம் கெட அவனை நுகர்வேன். 1266

கண்போன்ற காதலர் வந்தால்
ஊடுவேனா? தழுவுவேனா? கூடுவேனா? 1267

வேந்தன் போரில் ஈடுபட்டு வென்று வருக;
மனையில் மகிழ்ந்து மாலையில் விருந்திடுவோம். 1268

தொலை சென்றார் வரும்நாளை எண்ணுபவர்க்கு
வாராத ஒருநாள் ஏழுநாள்போல் தோன்றும். 1269

உள்ளம் உடைந்து சிதறியபின் அவரைப்
பெற்றால் என்ன? தழுவினாலும் என்ன? 1270





## *அவர்வயின் விதும்பல்*

வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். 1261

இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து. 1262

உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன். 1263

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறும்என் நெஞ்சு. 1264

காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்கும்என் மென்றோள் பசப்பு. 1265

வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட. 1266

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்அன்ன கேளிர் வரின். 1267

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து. 1268

ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு. 1269

பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்
உள்ளம் உடைந்துக்கக் கால். 1270

## குறிப்பறிவுறுத்தல்

நீ மறைத்தாலும் மீறி உன் கருங்கண்கள்
ஏதோ ஒன்றைச் சொல்லுகின்றன. 1271

கண்நிறைந்த அழகும் மூங்கில்போன்ற தோளும்
பெற்ற காதலிக்குப் பெண் தன்மை மிகுதி. 1272

மணிக்கோவையுள் நூல் தெரிவது போல
மங்கை அழகில் ஒரு குறிப்புத் தெரிகின்றது. 1273

மொட்டுக்குள் மணம் இருத்தல் போல
இவள் சிரிப்புக்குள் ஒரு குறிப்பு உண்டு. 1274

வளை நிறைந்தவள் செய்து போன கள்ளத்தில்
என் துயர் தீர்க்கும் மருந்து உண்டு. 1275

மிக அன்பு காட்டி ஆசையாகக் கூடுவதில்
பிரியும் கொடுமைக் குறிப்பு உண்டு. 1276

குளிர்ந்த துறைவன் பிரிவான் என்பதை
நம்மினும் முந்தி வளையல்கள் உணர்ந்தன. 1277

நேற்றுத்தான் காதலர் பிரிந்தார்; அதற்குள்
ஏழு நாள் அளவு பசலை அடைந்து விட்டேன். 1278

வளையலையும் தோளையும் காலையும் பார்த்தாள்;
இது பிரிவு சொன்னபோது அவள் செய்தது. 1279

காமநோயைக் கண்ணாற் சொல்லி வேண்டுதல்
சிறந்த பெண்தன்மை என்று சொல்லுவர். 1280





## குறிப்பறிவுறுத்தல்

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்க லுறுவதொன்று உண்டு. 1271

கண்நிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது. 1272

மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன்று உண்டு. 1273

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன்று உண்டு. 1274

செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கு மருந்தொன்று உடைத்து. 1275

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வது உடைத்து. 1276

தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை. 1277

நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து. 1278

தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண்டு அவள்செய் தது. 1279

பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு. 1280

## புணர்ச்சி விதும்பல்

நினைக்கவும் காணவும் மகிழ்ச்சி தருதல்
கள்ளுக்கு இல்லை; காமத்திற்கு உண்டு. 1281

பனையளவு காமவேட்கை பெருகுமாயின்
தினையளவுகூட ஊடுதல் ஆகாது. 1282

புறக்கணித்துத் தாம் விரும்பியனவே செய்தாலும்
காதலனைக் காணாமல் என்கண்கள் பொருந்தா. 1283

தோழி! நான் ஊடச் சென்றேன்; என் நெஞ்சோ
அது மறந்து கூடச்சென்றது. 1284

மைதீட்டுங்கால் தூரிகை கண்ணுக்குத் தெரியாது;
அவரைக்கண்டபோது பழி எனக்குத் தெரியாது. 1285

காணும்போது அவர் பிழையைக் காண்பதில்லை;
காணாதபோது பிழைதவிர வேறு காண்பதில்லை 1286

கரைசேர்த்தலை அறிந்து நீரில் பாய்வதுபோல்
பொய் என்று தெரிந்தும் ஊடிப் பயன் என்ன? 1287

இழிவான துன்பங்கள் செய்யினும், கள்வனே!
நின்மார்பு குடியர்க்குக் கள் போன்றது. 1288

காமவுணர்வு மலரைவிட மென்மையானது;
அதன் பக்குவம் அறிந்து துய்ப்பார் மிகச்சிலரே. 1289

தழுவுதற்கு என்னைவிடத் தான் துடிதுடித்துக்
கண்ணால் ஊடிக் கலங்கினாள். 1290





## புணர்ச்சி விதும்பல்

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு. 1281

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின். 1282

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணாது அமையல கண். 1283

ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு. 1284

எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. 1285

காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை. 1286

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலந்து. 1287

இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. 1288

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று. 1290

## நெஞ்சொடு புலத்தல்

அவர்மனம் அவர்பக்கம் இருப்பதைப் பார்த்தும்
என்மனமே! நீ என்பக்கம் இராதது ஏன்? 1291

பொருந்தாதவரின் நிலைதெரிந்த பின்னும்
வெறுக்கார் என்று என் நெஞ்சே! போகின்றாய். 1292

நெஞ்சே! உன்நோக்கப்படி அவரிடம் செல்லுதல்
கெட்டவர்க்கு நண்பரில்லை என்பது கருத்தோ? 1293

நெஞ்சே! முதலில் பிணங்கிப் பின் கூடாய்; இனி
அத்தகைய உன்னோடு யார் ஆராய்வார்? 1294

என் நெஞ்சம் என்றும் துன்பம் உடையது;
கூடாமைக்கும், கூடின் பிரிவுக்கும் வருந்தும். 1295

தனித்திருந்து அவரை நினைத்த போது
என்நெஞ்சம் என்னைத் தின்ன உடனிருந்தது. 1296

அவரை மறக்கமுடியாத மடமையுடைய
சிறிய நெஞ்சின்வயப்பட்டு நாணை விட்டேன். 1297

இகழ்தல் இழிவென்று அவர் பண்புகளையே
உயிர்ப்பற்றுடைய நெஞ்சு எண்ணும். 1298

தன்னுடைய நெஞ்சமே துணையாகாத போது
துன்பக் காலத்து வேறு யார் துணையாவார்? 1299

தன்னுடைய நெஞ்சமே உறவாகாத போது
அயலவர் உறவாகாமை இயல்புதானே. 1300





## நெஞ்சொடு புலத்தல்

அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது. 1291

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு. 1292

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல். 1293

இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294

பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு. 1295

தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு. 1296

நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சிற் பட்டு. 1297

எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. 1298

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி. 1299

தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி. 1300

## புலவி

தழுவாது இருந்து பிணங்குக; அப்போது
அவர் படும் துன்பத்தைச் சிறிது காண்போம். 1301

ஊடல் உணவுக்கு உப்பளவு போன்றது;
ஊடல் மிகுவது உப்புக் கூடுவது போலும். 1302

பிணங்கிய மகளிரைத் தழுவாது விடுதல்
வருந்தியவரை மேலும் வருத்துதல் போலாம். 1303

ஊடிய மகளிரை உணராத் தன்மை வாடிய
கொடியை அடியோடு அறுத்தது போலும். 1304

நற்பண்பு உடைய ஆடவர்க்கு அழகு
மலரன்ன மகளிரின் ஊடலை நீக்குதல். 1305

துனியில்லாக் காமம் பழம் ஒக்கும்;
புலவி யில்லாக் காமம் பிஞ்சு ஒக்கும். 1306

கூட்டம் நீளாதா என்று ஐயப் படுதலின்
ஊடலிலும் ஒரு துன்பம் உண்டு. 1307

கூடுதற்கு வருந்தினார் என்று ஊடலைப் புரியும்
காதலர் இல்லாத போது வருந்திப் பயனென்? 1308

நீரும் நிழலிடத்தே குடித்தல் இனியது;
பிணக்கமும் விரும்புவாரிடத்தே இனியது. 1309

ஊடலை வாட விடுவாரோடு என்மனம்
கூட நினைப்பது வெறும் ஆசையே. 1310





## புலவி

புல்லா திராஅப் புலத்தை அவர்உறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது. 1301

உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1303

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. 1304

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூஅன்ன கண்ணா ரகத்து. 1305

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. 1306

ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொல் என்று. 1307

நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்
காதலர் இல்லா வழி. 1308

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. 1310

## புலவி நுணுக்கம்

பரத்தையர் உன்னைக் கண்ணால் நுகர்வர்;
ஆதலின் பரத்தனே! நின் மார்பு தீண்டேன். 1311

பேசாது ஊடியபோது தும்மினார்; அவரை
நீடுவாழ்க என்று சொல்வேனென நினைத்து. 1312

குவியாத கோட்டுப்பூவைச் சூடினும் ஊடாத
பரத்தையைக் காட்டச் சூடியதாகச் சினப்பாள். 1313

யாரையும் விடக் காதல் உடையோம் என்றதும்
யாரைவிட யாரைவிட என்று பிணங்கினாள். 1314

இப்பிறப்பில் பிரிய மாட்டோம் என்றதும்
மறுபிறப்பில் பிரிவுண்டா என்று அழுதாள். 1315

நினைத்தேன் என்றேன்; திரும்ப நினைக்குமாறு
முன் ஏன் மறந்தீர் என்று தழுவாது ஊடினாள். 1316

தும்மினேன் வாழ்த்தினாள்; திரும்ப அழுதாள்
யார் நினைத்ததால் தும்மல் வந்ததென்று. 1317

வந்த தும்மலை அடக்கினேன்; அதற்கும் அழுதாள்
உம்பெண்டிர் நினைப்பதை ஒளிக்கிறீர் என்று. 1318

அவள் ஊடலைப் பணிந்து நீக்கினாலும் காய்வாள்;
பிறரிடமும் இங்ஙனந்தானே நடப்பீர் என்று. 1319

அவள் அழுகை உற்றுநோக்கினாலும் காய்வாள்;
யாரோடு ஒப்பு நோக்கினீர் என்று. 1320





## புலவி நுணுக்கம்

பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1311

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து. 1312

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. 1313

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று. 1314

இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். 1315

உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 1316

வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று. 1317

தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று. 1318

தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. 1319

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீர் என்று. 1320

## ஊடலுவகை

அவரிடம் ஒரு தவறும் இல்லை யாயினும்
ஊடல் அவரைப் பேரன்பு கொள்ளச் செய்யும். 1321

ஊடலால் சிறுபொழுது தோன்றும் வெறுப்பு
அவரன்பை வருத்தினும் பெருமைக்கு உரியது. 1322

மண்ணோடு நீர் குழைந்தாற்போன்ற காதலரிடம்
ஊடுதலைவிடத் தேவருலகம் இன்பமானதோ? 1323

காதலரை உடனே தழுவிவிடாத ஊடலில்
என் நிறையை உடைக்கும் படை பிறக்கின்றது. 1324

தவறில்லை யாயினும் தன்காதலியின் தோளைச்
சிறிது பிரிந்திருத்தலில் ஓரின்பம் உண்டு. 1325

உண்பதைவிட உண்டது செரித்தல் இன்பம்;
காமம் சேர்தலைவிடப் பிணங்குதல் இன்பம். 1326

ஊடலில் தோல்விப்பட்டவரே வென்றவர்;
அவ்வுண்மை கூடுஞ் செய்கையில் விளங்கும். 1327

நெற்றி வேர்க்கப் புணர்ந்த இனிமையை
இன்னும் ஒருமுறை ஊடிப் பெறுவேனோ? 1328

காதலி மேன்மேலும் ஊடுக; நான் வேண்ட
இரவு நேரம் மேன்மேலும் நீளுக. 1329

காமவுணர்ச்சிக்கு ஊடுதல் இன்பம்;
கூடித் தழுவுவதே அதற்குப் பேரின்பம். 1330





## ஊடலுவகை

இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவர்அளிக்கு மாறு. 1321

ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். 1322

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. 1323

புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்
உள்ளம் உடைக்கும் படை. 1324

தவறில ராயினும் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன்று உடைத்து. 1325

உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது. 1326

ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும். 1327

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு. 1328

ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா. 1329

ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். 1330

# செய்யுள் முதற்குறிப்பு

## அகரவரிசை

[எண்—செய்யுள் எண்]

# மூதறிஞர்
# வ.சுப. மாணிக்கனார்
# நூல்கள்

வள்ளுவம்

கம்பர்

திருக்குறட் சுடர்

சங்க நெறி

தொல்காப்பியக் கடல்

காப்பியப் பார்வை

இலக்கியச் சாறு

ஒரு நொடியில்

மாணிக்கக் குறள்